எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களை காப்பாற்றுகிறது.




L. 218-60 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 11 இதழ் 36 | 1952 ஏப்ரல் 6 | கர ௵ பங்குனி 24




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# விரைவில் வருகிறது!



பரணியின்

# காதல்

தமிழ்

டைரக்ஷன்
ராமகிருஷ்ண



BALU
BROS

பானுமதி, நாகேஸ்வர ராவ், முக்காமலா, சி. எஸ். ஆர்., சிவ ராவ், ஸ்ரீரஞ்சனி (Jr.), ரேலங்கி
மற்றும் பலர் நடித்தது

ஸ்டூடியோ : வாஹினி

பூரண உரிமையாளர்கள் : G. P. பிலிம்ஸ், பொரையார்

விவரங்களுக்கு : நாடார் கார்டன்ஸ், 9, டாக்டர் அழகப்ப செட்டியார் ரோடு, வேப்பேரி, சென்னை-7



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 36

# நடவாதது நடந்து விட்டது!

சென்ற பல ஆண்டுகளில் பல முறைகளில் "நாம் அன்றைக்குச் சொன்னோம்; அந்தப்படியே இன்றைக்கு நடந்திருக்கிறது!" என்று பெருமையுடன் இந்தப் பத்திரிகைத் தலையங்கத்தில் நாம் எழுதியதுண்டு.

இன்றைக்கு முதன் முறையாக "நாம் சொன்னபடி நடைபெறவில்லை; அதற்கு மாறாக நடந்தது பற்றி அளவிலாத மகிழ்ச்சி அடைகிறோம்" என்று பெருமையுடன் சொல்லிக் கொள்கிறோம்.

சென்ற இதழின் தலையங்கத்தில் "ராஜாஜியின் தலைமை: நடவாத வெறும் பேச்சு!" என்று நாம் எழுதிய பிறகு பல காரியங்கள் வெகு துரிதமாக, மூச்சுத் திணறும் வேகத்தில், நடந்தேறின.

சென்னைச் சட்டசபையில் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் கூடினார்கள். ராஜாஜியின் தலைமையைக் கோரி ஒருமுகமாகத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். ராஜாஜியிடம் தூது கோஷ்டியை அனுப்பினார்கள். அவருடைய பதிலுக்காகக் காத்திருக்கவும் கூட்டத்தைத் தள்ளிப் போடவும் முன் வந்தார்கள். பண்டித ஜவாஹர்லால்ஜியிடம் இருவர் பறந்து சென்றார்கள். அவரிடமிருந்து கடிதம் பெற்று வந்தார்கள்.

இம் மாகாணத்தின் நன்மையில் என்றும் சிரத்தை கொண்ட ராஜாஜி "முடியாது" என்று பதில் சொல்வதற்கு முடியாத சூழ்நிலையை மேற்கூறிய முயற்சிகள் உண்டாக்கி விட்டன.

முதலையின் வாயில் சிக்கிய கஜேந்திரனுடைய அபயக் குரலைக் கேட்டுப் பகவான் ஓடி வந்ததாகப் புராணம் சொல்கிறது.

அந்தப் பகவானுடைய பக்தர்களில் தலைசிறந்தவரான ராஜாஜியும் இன்று சென்னை மாகாணத்தை அபாயத்திலிருந்து தப்புவிப்பதற்காக ஓடி வரவேண்டியது இன்றியமையாததாயிற்று.

நாலு மாகாண காங்கிரஸ் தலைவர்களும் பிரேரபணை செய்ய, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சட்ட சபை அங்கத்தினர் அனைவரும் ஒருமுகமாக ராஜாஜியைக் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

சென்னை மாகாணம் ஒரு மிக நெருக்கடியான நிலைமையைச் சமாளித்து விட்டது என்ற உணர்ச்சி அதற்குள் மக்களுக்கு ஏற்பட்டு விட்டது.

காங்கிரஸ் கட்சியில் சேரவும் ஒத்துழைக்கவும் மற்றக் கட்சியினர் பலர் முன் வந்து கொண்டிருக்கிறார்கள்.

சென்னை மாகாணத்தைப் பிடித்திருந்த கிரகணம் விரைவில் விட்டு விடலாம் என்பதற்கு அறிகுறிகள் காணப்படுகின்றன. மறுபடியும் இம் மாகாணத்தினர் உலகத்தின் முன்னிலையில் தலை நிமிர்ந்து நிற்கக் கூடிய காலம் சீக்கிரத்தில் வரலாம் என்று தோன்றுகிறது.

இவ்விதமாக, 'நடவாது' என்று கருதிய காரியம் நடந்திருக்கிறது.

இதன் பொருட்டுச் சென்னை மாகாணத்து மக்களை மனமார வாழ்த்துகிறோம். அவர்களுக்கு வாய்த்திருக்கும் பாக்கியத்தைக் கொண்டாடி மகிழ்கிறோம்.

ராஜாஜியை ஒருமுகமாகவும் உற்சாகமாகவும் கட்சித் தலைமைக்குத் தேர்ந்தெடுத்த காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களைப் பாராட்டுகிறோம்.

நாட்டின் பல பகுதிகளிலும் "ராஜாஜியின் தலைமை இச்சமயம் வேண்டும்" என்று கோரித் தீர்மானம் நிறைவேற்றி அனுப்பியவர்களை, அவர்கள் நோக்கம் நிறைவேறியது குறித்து வாழ்த்தி மகிழ்கிறோம்.

இந்த நல்ல முடிவுக்கு இம்மாகாணத்துப் பொது மக்களில் பெரும்பாலோரின் ஆர்வமே பெரிதும் காரணமாயிருந்தது. எனினும் தனிப்பட்ட தேச பக்தர்கள் சிலர் பெரும் பிரயத்தனம் செய்தார்கள். அவர்களுடைய பிரயத்தனமில்லா விட்டால் இந்த நன்முடிவு ஏற்பட்டிராது என்றே சொல்லலாம்.

# ஏழு வருஷ மனோரதம்!




காங்கிரஸ் கட்சித் தலைமையை ஏற்றுக் கொள்வது பற்றி முடிவு சொல்ல ராஜாஜி இருபத்துநாலு மணி நேரம் அவகாசம் கேட்டார்! ஆனால் சென்னை மக்களோ ஏழு வருஷங்களாக அந்தப் பாக்கியத்துக்குக் காத்திருந்தார்கள்!

---

பிரதமர் கனம் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, டாக்டர் சௌந்தரம் ராமச்சந்திரன், கோயமுத்தூர் ஸ்ரீ சி. சுப்பிரமணியம், சர்தார் ஸ்ரீ ஏ. வேதரத்தினம் பிள்ளை, பொள்ளாச்சி ஸ்ரீ பி. ஆர். கந்தசாமி, ஸ்ரீ ராஜாராம் நாயுடு ஆகியவர்கள் இது விஷயமாகச் செய்த முயற்சிகளைப் பிரம்மப் பிரயத்தனம் என்றே சொல்லலாம்.

ஒரு மாத காலத்துக்கு மேலாகப் பலர் பிரயத்தனம் செய்து வந்த போதிலும், கடைசி சில தினங்களில் மேற்கூறிய சிலர் செய்த தீவிரப் பிரயத்தனமே ராஜாஜியின் தலைமை இம்மாகாணத்துக்குக் கிடைக்கும்படி செய்தது.

ஆந்திர மாகாணத்திலிருந்து வந்திருக்கும் காங்கிரஸ் எம். எல். ஏ. க்கள் அவ்வளவு பேரும் "ராஜாஜியின் தலைமைதான் வேண்டும்" என்று சத்தியாக்கிரஹம் செய்யக்கூடச் சித்தமாயிருந்தார்கள்.

இவர்களுக்கெல்லாம் சென்னை மாகாணப் பொது மக்களின் சார்பாக மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

* * *

சென்னை மாகாணத்துக்கும் இம்மாகாண மக்களுக்கும் ஏற்பட்டிருக்கும் அதிர்ஷ்டத்தை எண்ணும்போது நமக்கு உற்சாகமும் குதூகலமும் உண்டாகின்றன.

ஆனால் ராஜாஜியின் உடல் நிலையையும் அவர் ஏற்றுக் கொண்டிருக்கும் பெரும் பாரத்தையும் எண்ணும்போது நம்முடைய குதூகலம் பெரிதும் குறைந்து போய்விடுகிறது.

"ராஜாஜியின் தலைமை ஏற்பட்டு விட்டதனால் எல்லாம் இனிச் சரியாகி விடும்" என்று எளிதில் நாம் எண்ணி விடலாம்.

ஆனால் எல்லாம் சரியாவதற்கு முன்னால் ராஜாஜி எவ்வளவு வேலை செய்தாக வேண்டும், எவ்வளவு இடையூறுகளைச் சமாளித்தாக வேண்டும் என்று நினைக்கும்போது நம் உற்சாகம் அடியோடு குன்றி மறைந்து விடுகிறது.

"எதற்காக ராஜாஜி இந்தப் பெரும் பொறுப்பை ஒப்புக் கொண்டார்! முடியாது என்று கண்டிப்பாக மறுத்திருக்கக் கூடாதா!" என்றும் எண்ணத் தோன்றுகிறது.

இந்த அம்சத்தை அடிக்கடி எண்ணிப் பார்க்கும்படி இம்மாகாணத்துப் பொதுமக்களையும் காங்கிரஸ்வாதிகளையும் சட்டசபை அங்கத்தினர்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

எல்லா வழிகளிலும் எல்லா முறைகளிலும் ராஜாஜியுடன் ஒத்துழைப்பதென்றும் அவருக்கு எவ்விதத் தொந்திரவும் கொடுப்பதில்லையென்றும் அனைவரும் உறுதி பூண வேண்டும்.

மாகாணத்தின் பொது நன்மைக்குரிய காரியங்களைச் செய்வதற்கே அவருடைய பூரண சக்தியையும் அவகாசத்தையும் உபயோகப்படுத்தும்படி விட்டுவிட வேண்டும்.

தனிப்பட்டவர்கள் "எனக்கு அதைச் செய்யுங்கள்; இதைச் செய்யுங்கள்" என்று ராஜாஜியிடம் தற்போதைய நிலைமையில் போய்க் கேட்பதைப் போல் தேசத் துரோகமான காரியம் வேறொன்றும் இருக்க முடியாது.

சாதாரணமாகவே ராஜாஜி அம்மாதிரி சொந்த விஷயங்களில் கவனம் செலுத்த மாட்டார். இப்போது அறவே கவனிக்க முடியாதல்லவா!

இதற்குமுன் ராஜாஜி எத்தனையோ கஷ்டமான காரியங்களை மேற்கொண்டு செய்ததுண்டு. ஆனால் தற்சமயம் இம்மாகாணத்தின் அரசாங்கத்தை நடத்த ஒப்புக் கொண்டிருப்பதைப்போல் கடினமான காரியத்தை இதற்கு முன்னால் அவர் எப்போதும் ஏற்றுக் கொண்டதில்லை.

அவருடைய எழுபத்திரண்டு பிராயத்தையும் எண்ணிப் பார்த்து, அவருக்கு நம்மால் இயன்ற உதவிகளைச் செய்வது என்று உறுதி கொள்ள வேண்டும். உதவி செய்ய இயலாதவர்கள் அவர் எடுத்திருக்கும் காரியத்தில் வெற்றி பெறுமாறு இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். குறைந்த பட்சம், அவருக்கு இடையூறு செய்யாமலாவது இருக்க உறுதி கொள்ள வேண்டும்.

"ஜயமுண்டு பயமில்லை மனமே!—இந்த
ஜன்மத்திலே விடுதலை யுண்டு நிலை உண்டு!"

என்னும் பாரதியின் வாக்கு நிறைவேறுமாக.

# நம் கலை பெருமை பெற்றது!

இன்றைய தினம் வயலின் என்னும் இசைக் கருவியை அற்புதமாகக் கையாண்டு அமுத மழை பொழியக் கூடிய மேனாட்டு மகா வித்வான் எஹூதி மெனுஹின் என்பவர். இவர் ஐரோப்பாவில் பிறந்த யூதர். ஹிட்லரின் கொடுங்கோலாட்சியில் நாட்டை விட்டுச் சென்று அமெரிக்காவில் வசிப்பவர். வயலின் வித்வான்களில் உலகத்திலேயே இன்று இவருக்கு இணை கிடையாது என்பது பிரசித்தமான விஷயம்.

எஹூதி மெனுஹின் என்பவர் சமீபத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்தார். பிரதம மந்திரி நேரு தொடங்கியிருக்கும் பஞ்ச நிவாரண நிதிக்காகப் பல இடங்களில் கச்சேரி செய்தார். மேனாட்டுச் சங்கீத ரஸிகர்களை யன்றி நம்மவர்கள் பலரும் கேட்டு மகிழ்ந்தார்கள்.

மெனுஹின் தென்னிந்தியாவுக்கு வந்திருந்த போது "உங்களுடைய சிற்பக் கலைக்கும் உங்கள் சங்கீதக் கலைக்கும் உலகிலேயே இணையில்லை" என்று சொன்னார். "மேனாட்டுச் சங்கீத பாணியை உங்கள் சங்கீதத்தில் கலந்து வீணாக்கி விடாதீர்கள்" என்று எச்சரிக்கையும் செய்தார்.

சென்னையில் சில காலமாகச் சிறப்பாக நடைபெற்று வரும் கர்நாடக சங்கீத கலாசாலையில் ஸ்ரீ காரைக்குடி சாம்பசிவ அய்யரின் வீணையைக் கேட்டு விட்டு மெனுஹின் பரவச மடைந்தார். அவர் அருகில் வந்து "உங்களுடைய திறமையில் பாதித் திறமையோடு நான் வயலின் வாசித்தால் பெருமை யடைவேன்" என்று சொன்னார்.

இவ்வாறு வெளி நாட்டார் போற்றும் நம் சங்கீதக் கலையைக் கௌரவிக்க இந்திய அரசாங்கம் முன்வந்திருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறோம்.

சென்ற வாரத்தில் புது டில்லியில் இந்தியக் குடியரசின் ஜனாதிபதி மாளிகையில் ஹிந்துஸ்தானி சங்கீத வித்வான்கள் இருவரும் கர்நாடக சங்கீத வித்வான்கள் இருவரும் கௌரவிக்கப் பட்டார்கள். ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ரூபாய் ரொக்க சன்மானமும் ஐந்நூறு ரூபாய் பெறுமான சால்வையும் அளிக்கப்பட்டன.

ஆயிரம் ரூபாய் பெரிதல்ல; சால்வையின் பெறுமானம் பெரிதல்ல. சாதாரணமாக ஒரு கச்சேரியில் நம் சங்கீத வித்வான்கள் மேற்படி பணத்தைச் சம்பாதித்து விடுவார்கள்.

சுதந்திர இந்திய சர்க்கார் நமது சங்கீதக் கலைக்குப் பெருமை கொடுத்துப் போற்றினார்கள் என்பதுதான் முக்கியமான விஷயம்.

கர்நாடக சங்கீதத்துக்காகப் பொறுக்கி எடுக்கப்பட்ட இருவரும் மிகத் தகுதி வாய்ந்தவர்கள். நிராட்சேபணையாக அனைவராலும் ஒப்புக் கொள்ளக் கூடியவர்கள்.

வாத்திய சங்கீதத்துக்காக ஸ்ரீ காரைக்குடி சாம்பசிவ அய்யர் அவர்களையும் வாய்ப்பாட்டுக்காக ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களையும் தேர்ந்தெடுத்தது மிகப் பொருத்தமான காரியம். இருவரும் அவரவர்களுடைய துறையில் இணையற்ற பெருமை வாய்ந்தவர்கள். வயது முதிர்ச்சியினால் பழுத்த அநுபவம் பெற்றிருப்பதுடன் இளம் பிராய வித்வான் எவரைக் காட்டிலும் ஜீவசக்தியுடன் சங்கீதக் கலையைக் கையாண்டு மேன்மை அளிப்பவர்கள்.

ஸ்ரீ காரைக்குடி சாம்பசிவய்யர் அவர்களையும் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் அவர்களையும் பாராட்டி வாழ்த்துகிறோம். அவர்கள் நம் சுதந்திர சர்க்காரிடம் அடைந்த கௌரவத்தைக் கர்நாடக சங்கீதத்துக்குக் கிடைத்த கௌரவமாகவே கருதிப் பெருமிதம் அடைகிறோம்.

# பேசும் படங்கள் மூன்று வகை

நம் ஸினிமாப் படங்களைக் குறித்துச் சென்ற சில இதழ்களில் நாமும் எழுதியிருந்தோம்; நேயர்களின் கடிதங்களையும் பிரசுரித்திருந்தோம்.

இம்மாதிரி விஷயங்களில் பூரண அபிப்பிராய ஒற்றுமையை எதிர்பார்க்க முடியாது. இருவகை அபிப்பிராயங்களும் இருக்கக் கூடியதுதான். மிகப் பெரும்பாலான நேயர்களின் கருத்து தமிழ்ப் படங்கள் முன்னேற்றமடைய வேண்டிய அவசியத்தைப் பலமாக வற்புறுத்துகின்றன.

ஸினிமாப் படங்களைப் பற்றிய விவாதத்துக்குத் தற்காலிகமாக முடிவுரை கூற விரும்புகிறோம்.

நமது பேசும் படங்களைச் சாதாரணமாக மூன்று விதமாய்ப் பிரிப்பதுண்டு:- ஆடும் படங்கள், பாடும் படங்கள், ஓயாமல் பேசும் படங்கள் என்று. இந்த வேடிக்கைப் பிரிவினையைத் தவிர, வேறு மூன்று வகையாகவும் பேசும் படங்களைப் பிரிக்கலாம்.

1. **களிப்பூட்டும் படங்கள்** :—நாடோடி வாழ்க்கையில் ஈடுபட்டு அலுப்படைந்திருக்கும் மக்க

# நேருவின் சிகிச்சை!




இந்திய வர்த்தக சங்கத்தார் நேருஜியிடம் அதிக சலுகை கோரினார்கள். நேருஜியோ அவர்களுடைய அதிக லாப ஆசையை மட்டுப்படுத்திக் கொள்ளும்படி யோசனை கூறினார்.

---

னுக்குச் சிறிது நேரம் வாழ்க்கைத் தொல்லைகளை மறந்து உல்லாசமாகப் பொழுது போக்குவதற்குச் சாதனமான படங்கள் அவசியம் தேவைதான். ரசமான கதைப் போக்கு, மனோகரமான காட்சிகள், ஆடல் பாடல்கள், சிக்கலான சந்தர்ப்பங்கள், அவற்றிலிருந்து விடுதலையடையும் கட்டங்கள் ஆகியவை இந்த வகைப் பட்ட பேசும் படங்களில் அதிகமாக இருத்தல் இயல்பு.

ஆனால் 'களிப்பூட்டுதல்' என்ற பெயரால் மக்களின் மனதை மாசுபடுத்தும் ஆபாசக் காட்சிகள் உள்ள படங்கள் வெளியாவது நாட்டுக்கு எல்லா வகையிலும் கேடு சூழக் கூடியது.

களிப்பூட்டும் படங்கள் குற்றமற்ற உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட வேண்டும்.

இந்த ரகத்தில் தமிழ் நாட்டில் சமீப காலத்தில் வெளியாகியிருக்கும் படங்களுக்குச் "சந்திரலேகா" "அபூர்வ சகோதரர்கள்" "வாழ்க்கை" ஆகியவை சிறந்த உதாரணங்கள் ஆகும். இவை தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல் ஹிந்தியிலும் எடுக்கப்பட்டு வடநாட்டிலும் வெற்றியடைந்தன. இது குறித்து நாம் மகிழ்ச்சியும் பெருமையும் அடையலாம்.

ஆனால் சினிமாவைப் போன்ற அபார சக்தியுள்ள சாதனத்தைக் களிப்பூட்டும் கருவியாக மட்டும் உபயோகப்படுத்துவதில் நாம் பூரண திருப்தி அடைய முடியுமா? அடைய முடியாது; அடையவும் கூடாது.

2. **கருத்துள்ள படங்கள்:** சமூக முன்னேற்றத்துக்கும் தேச முன்னேற்றத்துக்கும் பயன்படக் கூடிய கருத்துள்ள சினிமாப் படங்களும் அவசியம் தேவை. இவற்றைப் "பிரசார நோக்கம் கொண்ட படங்கள்" என்று சொல்லுவதற்கு நாம் தயங்க வேண்டியதில்லை. ருஷ்யா தேசத்தில் வெளியாகும் எல்லாப் படங்களும் பிரசார நோக்கம் கொண்டவையே. அமெரிக்காவில் வெளியாகும் படங்களில் பாதிக்கு மேல் பிரசார நோக்கம் கொண்டவைதான். அவரவர்களுடைய தேசமும் அந்தந்த தேசத்தின் மக்களும் முன்னேறி உயரும் முறையில் பிரசாரக் கருத்துள்ள படங்களை அந்தந்தத் தேசங்களில் எடுக்கிறார்கள். அதற்காக அவர்கள் வெட்கப்படுவதில்லை. சில படங்கள் அப்பட்டமான பிரசாரமாயிருக்கின்றன. வேறு சில படங்கள் நாசூக்கான உயர்ந்த முறையில் பிரசாரம் செய்கின்றன.

ருஷ்யாவையும் அமெரிக்காவையும் நோக்கும் போது நம் பாரத நாடு எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது. நம் நாட்டுக்குப் பிரசார நோக்க முள்ள படங்கள் அவசியம் வேண்டும். ஆனால் பிரசாரம் என்ற பெயரால் விஷத்தைக் கக்கித் துவேஷத்தை வளர்க்கும் படங்கள் வெளியாகக் கூடாது.

கருத்துள்ள படங்களில் கலந்த பிரசாரம் தேசத்துக்கும் சமூகத்துக்கும் நன்மை தருவதாயிருக்க வேண்டும். நாடு உயர்வதற்கும் மக்கள் உயர்வதற்கும் சாதனமாயிருக்க வேண்டும். உழைப்பை உயர்த்தி, ஊக்கத்தை வளர்த்து, மலை போன்ற கஷ்டங்களைக் கண்டும் மனந்தளராத உள் வலிமையை ஊட்டி, சமூக நீதியை நிலை நாட்டும் உயர்ந்த கருத்துக்கள் அடங்கிய படங்கள் இந்தியாவின் இப்போதைய நிலையில்

இன்றியமையாதவை. இந்த நோக்கத்தை ஓரளவு நிறைவேற்றிய தமிழ்ப் படங்களுக்கு, சமீபத்தில் வெளிவந்தவற்றுள், "நல்ல தம்பி" "ஏழைபடும் பாடு" இவற்றை உதாரணமாகக் குறிப்பிடலாம்.

இம்மாதிரி படங்கள் இன்னும் ஏராளமாக வெளிவர வேண்டும்; அவை மற்ற அம்சங்களில் வெற்றிகரமான படங்களாகவும் அமையவேண்டும்.

ஆனால் இது மட்டும் போதுமா ! போதாது !

3. **நாம் உயர்ந்த படங்கள் :** வெளி நாடுகளிலே திரையிட்டு நமது புகழை வளர்க்கக் கூடிய சில உயர்தரப் படங்களாவது ஒவ்வொரு வருஷத்திலும் வெளியாக வேண்டும்.

இதைக் கேளுங்கள் : சென்ற சில மாதங்களில் இந்தியா தேசத்துக்கு வெளிநாடுகளிலிருந்து கலாச்சார கோஷ்டிகள் பல வந்தன. இங்கிலாந்து, அமெரிக்கா, ருஷ்யா, இத்தாலி, பிரான்ஸ், செக்கோஸ்லோவேகியா முதலிய பல நாடுகளிலிருந்தும் சிறந்த கலைஞர்கள் பலர் வந்தார்கள். அவர்கள் நம்முடைய சிற்பக் கலையின் அற்புதங்களைப் பார்த்து வியந்து பாராட்டினார்கள். நமது சங்கீதத்தைக் கேட்டு உவந்து புகழ்ந்தார்கள். நமது பரத நாட்டியக் கலையைக் கண்டும் கேட்டும் பரவச மடைந்தார்கள். "உங்கள் சிற்பத்துக்கும் சங்கீதத்துக்கும் பரத நாட்டியத்துக்கும் உலகில் இணை யில்லை" என்று சொன்னவர்களும் உண்டு. ஏன் ! நம் நாடகங்களைப் பார்த்துக் கூட வெளிநாட்டவர்களில் சிலர் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

ஆனால் அப்படி வந்திருந்த கலாச்சார கோஷ்டியில் யாராவது "உங்கள் சினிமாவைப் பார்த்தேன் ; நன்றாயிருந்தது !" என்று சொன்னதாக இதுவரையில் நாம் கேள்விப்படவில்லை.

இதற்காக அவர்களை நாம் நொந்து கொள்வதில் பயனில்லை. ஏனெனில் வெளி நாட்டார் கண்டு வியக்கக்கூடிய உயர்தரமான படங்களை இன்னும் நாம் வெளியிடவில்லை.

இத்தகைய உயர்தரப் படங்களுக்கு வெளி நாட்டுப் படங்களைத்தான் நாம் உதாரணம் சொல்ல வேண்டி யிருக்கிறது. அமெரிக்காவில் பல பரிசுகள் பெற்ற "Best Years of our Lives" என்ற படத்தையும், ருஷியாவில் வெளியான "The Story of a Real Man" என்னும் படத்தையும் உதாரணமாகச் சொல்லலாம்.

இத்தகைய தரம் உயர்ந்த படங்கள்,—வெளி உலகத்தில் நம் நாட்டையும் நம் சமூகத்தையும் நம் சினிமாக்கலையையும் உயர்த்திப் புகழ் அளிக்கக் கூடிய படங்கள்—இந்திய மக்களின் வாழ்க்கையில் உள்ள இன்ப துன்பங்களைச் சித்திரிக்க வேண்டும்; அவர்களுடைய இனிய பண்புகளைச் சித்திரிக்க வேண்டும் ; இந்தியாவின் புராதனப் பண்பாட்டைச் சித்திரிக்க வேண்டும் ; இந்தியாவின் உயரிய பாரமார்த்திக இலட்சியங்களை நல்ல முறையில் வெளியிட வேண்டும்.

பிரபல அமெரிக்க டைரக்டரான பிராங்க் காப்ரா என்பவர் சென்னையில் நடந்த சர்வதேச பிலிம் விழாவில் கூறியதென்ன ?

"உங்களுடைய படங்களில் உலகம் முக்கியமாக எதிர்பார்ப்பது உங்களுடைய பாரமார்த்திகப் பெருமையைத்தான் !" என்றார்.

நம்மிடம் சிறுமைகள் எவ்வளவோ இருக்கத்தான் இருக்கின்றன. அவற்றை நமக்குள் எடுத்துக் காட்டிப் பரிமாறிக் கொண்டால் போதுமல்லவா ! குறைகளை எடுத்துக் காட்டி இந்தியாவுக்கு விரோதமான பிரசாரம் செய்ய அன்னியர்கள் பலர் இருக்கிறார்கள். நாமும் எதற்காக அந்த நீசத் தொழிலைச் செய்ய வேண்டும் !

நம்முடைய சினிமா முதலாளிகள் "இந்திய சர்க்கார் படத் தொழிலுக்கு உதவி செய்வதில்லை" என்று ஓயாமல் குறை கூறுகிறார்கள். பிற நாட்டார் வந்திருக்கும் சபைகளிலேயும் தமாஷா வரியைப் பற்றி முறையிடுகிறார்கள்.

எத்தனையோ அரும்பாடுபட்டு அடைந்த சுதந்திரத்தைப் பாதுகாத்துத் தேசத்தை முன்னேற்ற முயன்று வரும் தேசத் தலைவர்களுக்கு நம் சினிமா முதலாளிகள் செய்ய வேண்டிய உதவியும் இருக்கிறது; தேசத்துக்கு அவர்கள் செய்ய வேண்டிய கடமையும் இருக்கிறது.

இந்திய சினிமா முதலாளிகள் தனிப்பட்ட முறையிலாவது, பலர் ஒன்று சேர்ந்தாவது, இந்தியா தேசத்தை உலகத்தின் முன்னிலையில் உயர்த்தக் கூடிய சில படங்களை ஆண்டு தோறும் தயாரித்து வெளியிட வேண்டும்.

அப்போது இந்திய சர்க்காரிடம் படத் தொழிலுக்கு உதவி கோரவும் சலுகைகள் கேட்கவும் நம் சினிமா முதலாளிகள் உரிமை பெறுவார்கள். அந்த நிலைமையில் பொதுமக்களும் அவர்களுக்கு வேண்டிய ஆதரவு அளிப்பார்கள்.

**அட்டைப்பட விளக்கம்**

பந்துகள் ஆடிப் பழகிடுவோம்—காலில்
பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம்
சந்தமொழுக் கும்மி பாடிடுவோம்—சுற்றிச்
சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம். —கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

இனிது இனிது இளமைப் பருவம் இனிது ! துன்பத்தை யெல்லாம் இன்பமாக மாற்றி ஏற்றுக் கொள்ளும் தன்மை இளமைப் பருவத்திற்கன்றி மனிதவாழ்வில் வேறு எந்தப் பருவத்தில் காணமுடியும்!

கொட்டு மழையைக் கண்டு கும்மாளம் போட்டுக் குதித்து ஆடி மகிழ்பவர்கள் சிறுவர்களே அல்லவா ! தகிக்கும் கோடையில் வெப்பம் சிறிதும் உணராது, அரை நாழிகை வெய்யிலும் வீண் போகாமல் ஓடி விளையாடுபவர்கள் சிறு பிராயத்தினரே யல்லவா !

பசி நோக்காமல் பந்தாடிக் களிப்பவர்களும் இளம் பருவத்தினரே யல்லவா !

பெரியவர்கள் கடுமையாகக் கோபித்துக் கொண்டாலும், உடனே மறந்து மன்னித்துப் பழையபடி அன்பு பூண்டு நடந்து கொள்ளும் பான்மை பாலர்களுக்கன்றி வேறு யாருக்கு உண்டு !

அப்படிப்பட்ட பாலகர்களைப் பார்ப்பது நாம் கண் பெற்ற பயனாகும். அவர்களுடைய களிப்பில் கலந்து கொள்வது பிறவிப் பயனைப் பெற்றது ஒக்கும். ஆகவே, அதற்கேற்ற சந்தர்ப்பத்தை இந்த இதழ் அட்டைச் சித்திரம் நேயர்களுக்கு அளிக்கிறது ! வாழ்க இளமை !

# பாரதி காட்டிய பாதை

## [கட்டுரைப் பரிசுப் போட்டி]

டேவிட் ஸாரனுப் என்னும் பதினைந்து வயதுச் சிறுவன் 1906-ம் வருஷத்தில் நியூயார்க் நகரின் வீதிகளில் பத்திரிகை விற்றுக் கொண்டிருந்தான். அவன் ருஷியா தேசத்தில் எங்கேயோ ஒரு மூலையில் உள்ள உஸ்லியன் என்னும் கிராமத்தில் பிறந்தவன். அவனுடைய பெற்றோர் ஜீவனோபாயத்தைத் தேடி அமெரிக்கா சென்று குடியேறியவர்கள். தந்தை சீக்கிரம் காலமாகி விட்டபடியால் மூத்த பையனாகிய டேவிட் ஒன்பது வயதில் குடும்ப பாரத்தைத் தாங்க வேண்டி வந்தது.

டேவிட் ஸாரனுப் பள்ளிக்கூடத்தில் கீழ் வகுப்புகளில் படித்துக் கொண்டு, பள்ளிக்கூடம் இல்லா நேரங்களில் பத்திரிகை விற்றுப் பணம் சம்பாதித்து வந்தான். பதினைந்தாம் வயதில் படிப்புப் போதும் என்று நிறுத்தி, முழு நேர வேலை தேட விரும்பினான். 'நியூயார்க் ஹெரால்ட்' என்னும் பத்திரிகைக் காரியாலயத்தில் ஆபீஸ் பையன் வேலை ஒன்று காலியாயிருப்பதாக அறிந்து அந்தக் காரியாலயத்துக்குச் சென்றான். ஆனால் வேலை தேடும் பரபரப்பில் மேற்படி பத்திரிகைக் காரியாலயத்துக்குள் நுழைவதற்குப் பதிலாகப் பக்கத்திலிருந்த கமர்ஷியல் கேபிள் கம்பெனியில் நுழைந்து விட்டான். அங்கேயும் ஆபீஸ் பையன் வேலை காலியாயிருந்து, கிடைத்தது. அப்போது தான் கம்பியில்லாத் தந்தி மூலம் செய்தி அனுப்பும் வித்தை ஆரம்ப நிலையில் இருந்தது. டேவிட் ஸாரனுப் அந்த வேலையை ஒழிந்த நேரத்தில் கற்றுக் கொண்டான். சில காலத்துக்கெல்லாம் மார்க்கோனி வயர்லெஸ் கம்பெனியில் வேலைக்குச் சென்றான். அங்கே, முதன் முதலில் கம்பியில்லாத் தந்தியைக் கண்டு பிடித்த மார்க்கோனி தம் பரிசோதனைகளை நடத்திக் கொண்டிருந்தார். அவரிடம் ஆபீஸ் பையனாய் அமர்ந்த டேவிட் அவரைத் தன் குருவாகவும் தெய்வமாகவும் போற்றினான். அவரிடம் ரேடியோவைப் பற்றி அறிந்தான்.

தற்போது டேவிட் ஸாரனுப் 55,000 பேர் வேலை செய்யும் அமெரிக்க ரேடியோ கார்ப்பொரேஷனின் தலைவனாயிருக்கிறான்! இந்தக் கம்பெனியின் வருஷ வருமானம் ஐந்நூறு கோடி டாலர்!

டேவிட் ஸாரனுப் என்னும் சிறுவன் தன்னுடைய ஊக்கத்தினாலும் முயற்சியினாலும் எப்படி இந்த மகோன்னதமான பதவிக்கு வந்தான் என்னும் வரலாறு 1952-ம் வருஷத்து, பிப்ரவரி மாதம் 'ரீடர்ஸ் டைஜஸ்டு' என்னும் சஞ்சிகையில் வெளியாகியிருக்கிறது.

அமெரிக்காவிலிருந்து வெளியாகும் மேற்படி 'ரீடர்ஸ் டைஜஸ்டு' பத்திரிகை பல தேசங்களில் பல பாஷைகளில் வெளியிடப்படுகிறது. மொத்தம் 65 லட்சம் பிரதிகள் மாதந்தோறும் அச்சடிக்கப்படுகின்றன!

அதே பிப்ரவரி இதழில் வெளியாகியிருக்கும் இன்னும் சிலகட்டுரைகளைப்பாருங்கள்.

மேரி பெத்தூன் என்னும் நீக்ரோ பெண்மணி 1875-ம் ஆண்டில் அமெரிக்காவில் பிறந்தவள். அவளுடைய தாயார் வெள்ளைக்காரக் குடும்பத்துக்குத் துணி துவைத்துப் போட்டுக் கொண்டிருந்தாள். மேரி பெத்தூன் குழந்தையாயிருந்த போது ஒரு புத்தகத்தைப் பார்க்கக் கையில் எடுத்தாள். வெள்ளைக்காரக் குழந்தைகள் அவளுக்குப் படிக்கத் தெரியாது என்று பரிகசித்தார்கள். அதனால் மேரி பெத்தூன் படிப்பில் ஆர்வம் கொண்டாள். எவ்வளவோ கஷ்டப்பட்டுப் படிப்பறிவு பெற்றாள். பின்னர் தன்னைப் போன்ற நீக்ரோக் குழந்தைகளுக்குப் படிப்பு அளிக்க வேண்டும் என்ற ஆர்வம் அவளுக்கு உண்டாயிற்று. பிளாரிடா மாகாணத்தில் புதிய ரயில் பாதையில் வேலை செய்த நீக்ரோ தொழிலாளிகளின் குழந்தைகள் ஐந்து பேருடன் முதல் பள்ளிக்கூடம் ஆரம்பித்தாள். மேற்படி தொழிலாளிகளுக்குப் பட்சணம் செய்து விற்றுப் பள்ளிக்கூடக் கட்டிடத்துக்கு வாடகை கொடுத்தாள்.

இப்படிச் சமூகத் தொண்டு செய்ய ஆரம்பித்த பெண்மணி 1930-ம் வருஷத்தில் ஜனாதிபதி ஹூவரால் அவருடைய மாளிகைக்கு அழைக்கப் பட்டாள். அமெரிக்கா தேசத்திலுள்ள நீக்ரோ குழந்தைகளின் ஆரோக்கியத்துக்கும் கல்விப் பயிற்சிக்கும் அவள் பொறுப்பாளியானாள். ஜனாதிபதி ரூஸ்வெல்ட் ஆட்சியில் அந்த நீக்ரோ பெண்மணியின் மேற்பார்வையில் ஆறு லட்சம் தொழிற் கல்வி வகுப்புகள் தேசமெங்கும் நீக்ரோ குழந்தைகளுக்காக நடத்தப்பட்டன! 1945-ம் வருஷத்தில் ஸான்பிரான்ஸிஸ்கோவில் நடந்த ஐக்கிய தேச மகாசபைக்கு ஸ்ரீமதி பெத்தூன் அமெரிக்கப் பிரதிநிதிகளில் ஒருவராக அனுப்பப்பட்டார்.

ஜனாதிபதி ரூஸ்வெல்ட் "நான் எத்தனையோ தடபுடல் பேர்வழிகளைத் தினந்தோறும் பார்த்து வருகிறேன். ஆனால் தங்களைப் பார்க்கும்போது தான் என் மனதில் உண்மையான சாந்தி உண்டாகிறது" என்று சொல்வது வழக்கமாம். இந்த வரலாறும் அதே இதழில் வெளியாகியிருக்கிறது.



அதே பத்திரிகையில் இன்னொரு கட்டுரை, அமெரிக்கத் தம்பதிகள் இருவர் காட்டிலே சென்று தங்கள் உழைப்பினால் மரக் குடிசை கட்டிக்கொண்டு வருஷத்தில் சில மாதம் அங்கே வசிப்பதையும் அதில் அவர்கள் அடையும் சந்தோஷத்தையும் விவரிக்கிறது.

மாலி எப்ஸ்டீன் என்னும் பெண்மணிக்குக் குழந்தையில்லை. 65 வயதுக்கு மேல் அவள் அநாதைக் குழந்தைகள் 17 பேரைத் தன் குழந்தைகளாக்கிக் கொண்டு அவர்களை எப்படி வளர்த்து வருகிறாள் என்பதை மற்றொரு கட்டுரை விவரிக்கிறது. அவள் பணக்காரியோ என்றால், அதுதான் இல்லை! வாரத்துக்கு நாலு நாள்,

தினம் ஒன்பது மணி நேரம் வீதம், ஒரு ஹோட்டலில் வேலை செய்து சம்பாதிக்கிறவள்!

ஓயாமல் எதற்காவது குறைப்பட்டுக் கொண்டிருக்கும் சுபாவம் எவ்வளவு தீமையானது என்பது இன்னொரு கட்டுரையின் கருத்து. குறைகளை மறந்து உற்சாகத்துடன் வேலையில் ஈடுபடுவதால் ஏற்படும் பெருநன்மையை அக்கட்டுரை விவரிக்கிறது.

நடுத்தரக் குடும்பங்களில் புருஷன் மட்டும் வேலை செய்து சம்பாதித்தால் குடும்பம் நடத்துவதற்குப் போதுவதில்லை. மனைவியும் ஏதோ ஒரு தொழில் செய்து சிறிது பொருள் சம்பாதிப்பதால் குடும்ப வாழ்க்கை எவ்வளவு சந்தோஷமாகிறது என்பது இன்னொரு கட்டுரையின் சாராம்சம். அம்மாதிரி, **எண்பது லக்ஷம் குடும்ப ஸ்திரீகள்** இன்று அமெரிக்காவில் ஏதேனும் ஒரு வேலையில் ஈடுபட்டுப் பணம் சம்பாதிக்கிறார்களாம்.

கொரியா போர் முனையில் தொண்டு செய்யச் சென்ற ஒரு நர்ஸ் அம்மாளின் அஞ்சா நெஞ்சத்தையும் தீரச் செயல்களையும் இன்னொரு கட்டுரை விவரிக்கிறது.

“உழைப்பில் என்ன கெடுதல்!” என்பது இன்னொரு கட்டுரையின் தலைப்பு. ரோமாபுரியில் ஐசுவரியம் மிதமிஞ்சிப் போன போது ரோமர்கள் உழைப்பை அலட்சியம் செய்து சோம்பேறிகளானார்கள். அதனால் ரோம சாம்ராஜ்யமே அழிந்தது. இந்த உதாரணத்தை அமெரிக்கர்களுக்கு எடுத்துக் காட்டி, “அமெரிக்காவுக்கு இப்போது போதிக்க வேண்டியது உழைப்பின் தத்துவம். **உழைப்பினால் மட்டுமே மனிதன் தன் பூரண சக்தியை அடையக் கூடும். மனிதனைத் தூய்மைப் படுத்துவது உழைப்பு. உழைப்பே உயிர்!**” என்று மேற்படி கட்டுரை முடிகிறது.

இப்படியெல்லாம் உழைப்பு, ஊக்கம், விடா முயற்சி, தன்னம்பிக்கை, தைரியம் ஆகியவற்றைத் தற்கால அமெரிக்கர்களுக்குப் போதிப்பது அவசியமாயிருந்தால், நம்முடைய பாரத தேசத்துக்கு அத்தகைய போதனைகள் எவ்வளவு அவசியம் என்று சொல்ல வேண்டியதில்லை.

* * *

எக்காரணத்தினாலோ, யார் இட்ட சாபத்தினாலோ, இன்று தமிழ் நாட்டில் மனச்சோர்வு என்னும் நோய் அதிகம் பரவி வருவதைக் காண்கிறோம். மக்கள் எளிதில் நிராசை அடைந்து விடுகிறார்கள். தன்னம்பிக்கை குறைந்து வருகிறது. ஊக்கத்திலும் உழைப்பிலும் ஆர்வம் குன்றுகிறது; குருட்டு அதிர்ஷ்டம் அடிக்காதா என்று எதிர்பார்க்கும் மனப்பான்மை பரவுகிறது.

இந்த மன நோய்க்கு, சமூகத்தையே நாசமாக்கக் கூடிய இந்தக் கொடிய விஷத்துக்கு, அமுதம் போன்ற அருமருந்து பாரதியார் பாடல்கள்.

புதிய ஆத்திச்சூடியின் முதல் வரி “**அச்சந் தவிர்!**” என்பது. பாரதியார் நூல்களில் எந்தப் பக்கத்தைத் திருப்பினாலும் வெற்றி முரசு ஒலிக்கும்; சங்கநாதம் கேட்கும்; ஜயபேரிகை முழங்கும். உள்ளச் சோர்வினைப் போக்கி, நிராசையை நீக்கி, தன்னம்பிக்கையை ஊட்டி, ஊக்கத்தையும் உள் வலிமையையும் வளர்க்கும் மந்திரங்களைக் கவியரசர் பாரதியார் கவிதைகளிலும் வசன நூல்களிலும் எங்கெங்கும் காணலாம்.

தமிழர்கள் உயர வேண்டும், தமிழ்நாடு முன்னேற வேண்டும் என்பதில் பாரதியார் கொண்டிருந்த ஆர்வம் அளவில்லாதது. தமிழர்களை உலகில் முன்னேற்றுவது மட்டுமல்ல, ஆகாசத்திலேயே பறக்கச் சொல்கிறார் பாரதியார்.

அத்தகைய மகாகவி பாரதியாரின் மந்திரங்களைத் தமிழர்களுக்கு நினைவூட்டுவது தற்சமயம் அவசியமாயிருக்கிறது.

அதற்காகப் “பாரதி காட்டும் பாதை” என்ற தலைப்பில் ஒரு கட்டுரைப் போட்டி நடத்த முடிவு செய்திருக்கிறோம்.

பாரதியாரின் பாடல்களிலிருந்தோ, வசன நூல்களிலிருந்தோ இரண்டு வரி அல்லது நாலு வரி பொறுக்கி எடுத்துக் கொள்ளுங்கள்.

ஊக்கம், உற்சாகம், உழைப்பு, முயற்சி, மனோ தைரியம், தன்னம்பிக்கை,—இவற்றை வற்புறுத்தும் வரிகளாக அவை இருக்க வேண்டும்.

பாப்பா பாட்டிலிருந்து இரண்டு உதாரணங்களைக் கீழே தருகிறோம்.

“சோம்பல் மிகக்கெடுதி பாப்பா—தாய்
சொன்ன சொல்லைத்தட்டாதே பாப்பா
தேம்பியழும் குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா!”

“உயிர்களிடத்தில் அன்புவேண்டும்—தெய்வம்
உண்டென்று தானறிதல் வேண்டும்
வயிரமுடைய நெஞ்சுவேண்டும்—இது
வாழும் முறைமையடி பாப்பா!”

இம்மாதிரி கருத்துக்களடங்கிய எத்தனையோ இரண்டு வரிகளையும் நான்கு வரிகளையும் பாரதியார் நூல்களில் காணலாம்.

அவற்றை ஆதாரமாக வைத்துக்கொண்டு “கல்கி” பத்திரிகையில் இரண்டு பக்கம் முதல் மூன்று பக்கத்துக்குள் வரும்படி ஒரு கட்டுரை எழுதுங்கள்.

சரித்திரங்களிலிருந்தும் உண்மை வாழ்க்கை வரலாறுகளிலிருந்தும் உதாரணங்கள் எடுத்துக் காட்டலாம்; வேறு நூல்களிலிருந்து மேற்கோள்களும் எடுத்தாளலாம்.

ஏப்ரல் மாதம் 30ந் தேதிக்குள் கட்டுரையை நமக்கு வந்து சேரும்படி அனுப்பி வையுங்கள்.

எல்லாவற்றிலும் சிறந்ததென்று ஆசிரியர் கருதும் கட்டுரைக்கு நூறு ரூபாய் ரொக்கப் பரிசும் ஒரு தங்கமெடலும் அளிக்கப்படும்.

மற்றும் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கட்டுரைக்கும் பதினைந்து ரூபாய் சன்மானம் அளிக்கப்படும்.

“கல்கி” வாசகர்கள் அனைவரும், புருஷர்களும் பெண்மணிகளும், சிறுவர் சிறுமிகளும், இந்தக் கட்டுரைப் போட்டியில் ஈடுபடலாம்.

பொதுவான முதற் பரிசு அளிக்கப்படுவதைத் தவிர, மாணவர்களால் எழுதப்படும் சிறந்த கட்டுரைக்கு மற்றொரு விசேஷப் பரிசு, நூறு ரூபாயும் தங்கமெடலும் அளிக்கப்படும்.

ஹைஸ்கூல் மாணவர்களும் காலேஜ் மாணவர்களும் இந்த விசேஷப் பரிசைப் பெறுவதற்கு முயற்சி செய்யலாம். ஆகையால், கட்டுரை எழுதும் மாணவர்கள் தங்கள் விலாசத்துடன் படிக்கும் வகுப்பு, பள்ளிக்கூடம் அல்லது கலாசாலை இவற்றையும் குறிப்பிடக் கோருகிறோம்.

இலங்கையிலும் பர்மா முதலிய வெளி நாடுகளிலும் உள்ள தமிழ்ச் சகோதர சகோதரிகளும் இக்கட்டுரைப் போட்டியில் கலந்து கொள்ளலாம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.★

---

★பாரதியாரின் நூல்கள் வேண்டுவோர் கவர்ன்மெண்டு பிரஸ், மவுண்ட் ரோட், சென்னை என்ற விலாசத்துக்கு எழுதித் தருவித்துக் கொள்ளலாம்.



# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 16

## மதுராந்தகத் தேவர்

இந்தக் கதையில் ஒரு முக்கிய பாத்திரமாகிய மதுராந்தகத் தேவரைக் கதை ஆரம்பத்தில் கடம்பூர் மாளிகையிலேயே நாம் சந்தித்தோம். இன்னொரு முறை பழுவேட்டரையரின் பாதாள நிலவறைப் பாதை வழியாக நள்ளிரவில் அவர் அரண்மனைக்குச் சென்றபோது பார்த்தோம். அப்பொழுதெல்லாம் அந்தப் பிரசித்திபெற்ற இளவரசரை, — பின்னால் பரகேசரி உத்தம சோழர் என்னும் பட்டப் பெயருடன் தஞ்சைச் சிம்மாதனத்தில் வீற்றிருக்கப் போகிறவரை,— நல்ல முறையில் வாசகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கவில்லை. அந்தக் குறையை இப்போது நிவர்த்தி செய்து வைக்க விரும்புகிறோம்.

மதுராந்தகரைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் அவருடைய பரம்பரையைக் குறித்தும் வாசகர்களுக்குச் சிறிது ஞாபகப் படுத்த வேண்டும்.

சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு முன்னால் சோழ நாட்டில் நீண்டகாலம் அரசு செலுத்தியவர் அவருடைய பெரிய தந்தை கண்டராதித்த சோழர். அவரும் அவருடைய தர்மபத்தினியான மழவரையர் மகள் செம்பியன்மாதேவியும் சிவ பக்த சிகாமணிகள். சிவாலயத் திருப்பணிகளிலேயே தங்கள் வாழ்க்கையை அவர்கள் முழுதும் ஈடுபடுத்தியவர்கள்.

கல்கி

தமிழ் நாடெங்கும் சிதறிக் கிடந்த தேவாரத் திருப்பதிகங்களைத் தொகுத்துச்சேர்க்கக் கண்டராதித்தர் ஆசை கொண்டிருந்தார். அந்த ஆசை அவர் ஆயுள் காலத்தில் நிறைவேறவில்லை. ஆயினும் சில பாடல்களைச் சேகரித்தார். தேவாரப் பதிகங்களின் முறையில் தாமும் சில பாடல்களைப் பாடினார். அவற்றில் சிதம்பரத்தைப் பற்றி அவர் பாடிய பதிகம் திருவிசைப்பா என்ற தொகுதியில் இன்னும் வழங்கி வருகிறது.

கண்டராதித்தர் தமது அரும் பெரும் தந்தையாகிய பராந்தக சக்கரவர்த்தி தில்லையம்பலத்துக்குப் பொன் வேய்ந்தது பற்றித் தாம் பாடிய பதிகத்தில் குறிப்பிட்டிருக்கிறார் :—

**"வெங்கோல் வேந்தன் தென்னன் நாடும்**
**ஈழமும்கொண்ட திறல்**
**செங்கோற்சோழன் கோழிவேந்தன்**
**செம்பியன் பொன்னணிந்த**
**அங்கோல்வளையார் பாடியாடும்**
**மணி தில்லையம்பலத்துள்**
**எங்கோன் ஈசன் எம்மிறையை என்றுகொல்**
**எய்துவதே !"**

என்ற பாடலில் தம் தந்தை பாண்டிய நாடும் ஈழமும் வென்றவர் என்பதைக் குறிப்பிட்டிருக்கிறார். பதிகத்தின் கடைசிப் பாடலில் தமது பெயரை அவர் குறித்திருப்பதுடன், தம்முடைய காலத்தில் சோழரின் தலைநகரம் தஞ்சையானதையும் குறிப்பிட்டிருக்கிறார்.

"சீரான்மல்கு தில்லைச் செம்பொனம்பலத்தாடி தன்னைக்
காரார் சோலைக் கோழிவேந்தன் தஞ்சையர்கோன் கலந்த
ஆராவின் சொல் கண்டராதித்தன் அருந்தமிழ் மாலைவல்லார்
பேராவுலகிற் பெருமையோடும் பேரின்பம் எய்துவரே!"

கண்டராதித்தருக்குப் போர் செய்து இராஜ்யத்தை விஸ்தரிப்பதில் நம்பிக்கை இருக்கவில்லை. போர்களினால் மனிதர்கள் அடையும் துன்பங்களைக் கண்டு வருந்தியவரான படியால் கூடிய வரையில் சண்டைகளை விலக்க முயன்றார்; சமாதானத்தையே நாடினார். இதன் காரணமாக இவர் ஆட்சிக் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் மிகச் சுருங்கலாயிற்று.

கண்டராதித்தர் தம் முதிர்ந்த வயதில் மழவரையர் மகளை மணந்து கொண்டார். அவர்களுடைய புதல்வன் மதுராந்தகன், கண்டராதித்தரின் அந்திய காலத்தில் சின்னஞ் சிறு குழந்தை. இராஜ்யத்தைச் சுற்றிலும் எதிரிகள் தலையெடுத்துக் கொண்டிருந்தனர். அதே சமயத்தில் கண்டராதித்தரின் தம்பி அரிஞ்சயன் போரில் காயம் பட்டு மரணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். அரிஞ்சயனுடைய குமாரன் சுந்தர சோழன் அதற்குள் காளைப் பருவத்தைக் கடந்து, பல போர்களிலே வெற்றி முரசு கொட்டி, மகா வீரன் என்ற பெயர் பெற்றிருந்தான். ஆதலின் கண்டராதித்தர் தமக்குப் பின்னர் சுந்தர சோழனே பட்டத்துக்குரியவன் என்று முடிவு கட்டிக் குடிமக்களுக்கும் அறிவித்து விட்டார். பின்னால் சிம்மாதனம் சம்பந்தமான குடும்பச் சண்டைகள் உண்டாகாதிருக்கும் பொருட்டுச் சுந்தர சோழருடைய சந்ததிகளே பட்டத்துக்கு உரியவர்கள் என்றும் சொல்லிவிட்டார்.

தமது குமாரன் மதுராந்தகனைச் சிவ பக்தனாக வளர்த்துச் சிவ கைங்கரியத்தில் ஈடுபடுத்த வேண்டும் என்று தம் மனைவியிடமும் அவர் சொல்லியிருந்தார். இவையெல்லாம் அந்நாளில் நாடறிந்த விஷயங்களாயிருந்தன.

செம்பியன்மாதேவி தன் கணவருக்கு அளித்த வாக்கை நிறைவேற்றி வந்தாள். மதுராந்தகனுடைய சிறு பிராயத்திலேயே அவன் உள்ளத்தில் சிவபக்தியையும் உலக வாழ்வில் வைராக்யத்தையும் உண்டாக்கி வளர்த்து வந்தாள்.

ஏறக்குறைய இருபது பிராயம் வரையில் மதுராந்தகன் அன்னையின் வாக்கையே வேத வாக்காகக் கொண்டு நடந்து வந்தான். இராஜ்ய விவகாரங்களில் அவனுக்குச் சிறிதும் பற்று ஏற்படவில்லை. சோழ சிங்காதனம் தனக்கு உரியது என்ற எண்ணமே அவன் உள்ளத்தில் உதயமாகாமல் இருந்தது.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் சின்னப் பழுவேட்டரையரின் மகளை மணந்ததிலிருந்து அவன் மனம் மாறத் தொடங்கியது. ஆரம்பத்தில் இலேசாகத் தலைகாட்டிய ஆசைக்குப் பழுவூர் இளையராணி நந்தினி தூபம் போட்டுப் பெரிதாக்கி வந்தாள். சிறிய தீப்பொறி அதிவிரைவில் பெரிய காட்டுத் தீ ஆகிவிட்டது. பல்வேறு காரணங்களினால் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும் பெருந்தர அதிகாரிகளும் மதுராந்தகனை ஆதரித்துச் சதி செய்ய முற்பட்டதையும் பார்த்தோம். மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றுவதற்குச் சுந்தர சோழர் கண் மூடும் சந்தர்ப்பத்தை அவர்கள் எதிர்நோக்கியிருந்தார்கள். ஆனால் மதுராந்தகனோ அவ்வளவு காலம் காத்திருப்பதற்கே விரும்பவில்லை. சுந்தர சோழருக்குச் சிம்மாசனத்தில் பாத்தியதை இல்லையென்றும், தனக்கே சோழ சாம்ராஜ்யம் வந்திருக்க வேண்டும் என்றும் அவன் எண்ணத் தொடங்கினான். அதிலும் இப்போது சுந்தர சோழர் நோய்ப் பட்டுப் படுத்த படுக்கையாகி இராஜ்யத்தைக் கவனிக்க முடியாத நிலைமையில் இருந்தார் அல்லவா? ஆதலின் ஏன் தான் உடனடியாகத் தஞ்சாவூர் சிங்காதன மேறி இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்ளக் கூடாது?—

இவ்விதம் மதுராந்தகனுக்கு ஏற்பட்டிருந்த அரசுரிமை வெறியைக் கட்டுக்குள் அடக்கி வைப்பது இப்போது பழுவேட்டரையர்களின் பொறுப்பாயிருந்தது. அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுத்துவிட அவர்கள் விரும்பவில்லை. சுந்தர சோழரின் இரு புதல்வர்களும் வீராதி வீரர்கள். அவர்களுடைய வீரச் செயல்களினாலும் பிற குணாதிசயங்களினாலும் குடிமக்களின் உள்ளங்களில் அவர்கள் இடம் பெற்றிருந்தனர். கொடும்பாளூர் வேளார், திருக்கோவலூர் மலையமான் என்னும் இரு பெரும் தலைவர்கள் சுந்தர சோழரின் புதல்வர்களை ஆதரித்து நின்றார்கள். சைன்யத்திலேயும் ஒரு பெரும் பகுதி வீரர்கள்

சுந்தர சோழரின் புத்திரர்களையே விரும்பினார்கள். ஆகையால் சக்கரவர்த்தி உயிரோடிருக்கும் வரையில் பழுவேட்டரையர்கள் பொறுமையுடனிருக்கத் தீர்மானித்தார்கள். இதற்கிடையில், சக்கரவர்த்தியின் மனமும் சிறிதளவு மாறியிருந்ததை அவர்கள் அறிந்து கொண்டார்கள். தமக்குப் பிறகு இளவரசர் மதுராந்தகருக்குத்தான் பட்டம் என்று சுந்தர சோழரே சொல்லிவிட்டால் ஒரு தொல்லையும் இல்லை. இதற்குக் குறுக்கே நின்று தடை செய்யக் கூடியவர்கள் இளைய பிராட்டியும் செம்பியன் மாதேவியுந்தான். இளைய பிராட்டியின் சூழ்ச்சிகளை மாற்றுச் சூழ்ச்சிகளினால் வென்றுவிடலாம். ஆனால் தமிழ் நாடெங்கும் தெய்வாம்சம் பெற்றவராகப் போற்றப்பட்டு வரும் செம்பியன் மாதேவி தடுத்து நின்றால், அந்தத் தடையைக் கடப்பது எளிதன்று. அந்தப் பெருமாட்டி தாம் பெற்ற புதல்வன் சிம்மாதனம் ஏறுவதை விரும்பவில்லை யென்பது எங்கும் பரவியிருந்தது. அன்னையின் வார்த்தையை மீறி மகன் சிங்காதனம் ஏறுவதைக் குடி மக்கள் எப்படி ஏற்றுக் கொள்ளுவார்கள்? ஒன்று, அந்த அம்மாளும் தமது கணவரைப் பின்பற்றிக் கைலாச பதவிக்குச் செல்ல வேண்டும். அல்லது அவருடைய மனம் மாறச் செய்ய வேண்டும். தாயின் மனத்தை மாற்றக் கூடிய சக்தி, பெற்ற பிள்ளையைத் தவிர வேறு யாருக்கு இருக்கக் கூடும்?

ஆதலின் அன்னையிடம் சொல்லி அவர் மனதை மாற்றும்படி மதுராந்தகத் தேவரை அடிக்கடி பழுவேட்டரையர்கள் தூண்டிக் கொண்டிருந்தார்கள். மதுராந்தகர் இந்தக் காரியத்தில் மட்டும் உற்சாகம் காட்டவில்லை. இராஜ்யம் ஆளும் ஆசை அவர் உள்ளத்தில் வெறியாக மூண்டிருந்தது. ஆனால் அன்னையிடம் அதைப் பற்றிப் பேச மட்டும் அவர் தயங்கினார். ஏன்?—அந்த மூதாட்டியைச் சந்தித்துப் பேசுவதற்கே அவர் அவ்வளவாக விரும்பவில்லை.

இப்போது, செம்பியன் மாதேவியே தஞ்சைக்குச் செய்தி சொல்லி அனுப்பியிருந்தார். தமது கணவருடைய விருப்பங்களில் முக்கியமானதொரு விருப்பத்தை நிறைவேற்றத் திட்டமிட்டிருப்பதாகவும், அந்தச் சந்தர்ப்பத்தில் தம் குமாரன் தம்முடன் இருக்க வேண்டும் என்றும் தெரியப்படுத்தியிருந்தாள். அதன்படியே சின்னப் பழுவேட்டரையர் மதுராந்தகரைப் பழையாறைக்குப் போய் வரும்படி கூறினார். இச் சந்தர்ப்பத்தில் தஞ்சைச் சிங்காதனத்துக்குத் தமக்குள்ள உரிமை பற்றித் தாயிடம் வாதாடி அவருடைய மனதை மாற்ற முயலும்படியும் சொல்லி அனுப்பினார்.

## அத்தியாயம் 17

# திருநாரையூர் நம்பி

மதுராந்தகத் தேவர் தமது பரிவாரங்களுடனும் வந்தியத்தேவனுடனும் பழையாறை நகருக்குள் பிரவேசித்தார். ஆரியப்படை வீடு, பம்பைப் படை வீடு, புதுப்படை வீடு, மணப்படை வீடு முதலான வீரர்கள் வாழும் பகுதிகளின் வழியாக ஊர்வலம் சென்றது. பிறகு கடை வீதிகள், குடி மக்கள் வாழும் பகுதிகள், ஆலயங்கள், ஆலயங்களைச் சூழ்ந்திருந்த சந்நிதித் தெருக்கள் முதலியவற்றின் வழியாகச் சென்றது. ஆங்காங்கு ஒரு சிலர் வீட்டு வாசல்களில் நின்று பார்த்தார்கள். ஆனால் மக்களிடையே எவ்வித உற்சாகமும் இல்லை என்பதை வந்தியத்தேவன் கண்டான். முன்முறை அவன் இந்நகருக்குள் வந்திருந்தபோது நகரம் கோலாகலத்தில் மூழ்கியிருந்தது. இப்போது வீதிகள் ஜன சூனியமாயிருந்தன. பழையாறை பாழடைந்த நகரமோ என்று சொல்லும்படி இருந்தது. மதுராந்தகத் தேவர் மீது பழையாறை மக்கள் அவ்வளவாக விசுவாசம் கொண்டிருக்கவில்லை என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது. வந்தியத்தேவனுக்கு இது ஒரு விதத்தில் சௌகரியமாயிருந்தது. தன் முகம் தெரிந்தவர்கள் யாரேனும் தன்னைப் பார்க்கும்படி நேரவும், அதனால் தொல்லை ஏற்படவும் இடமில்லையல்லவா?

இவர்கள் சோழ மன்னர்களின் புராதன அரண்மனை வீதியை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் இன்னொரு பக்கமிருந்து பெரிய தேரோர் ஊர்வலம் வந்து கொண்டிருந்ததைக் கண்டார்கள். அந்த ஊர்வலத்தின் மத்தியில் திறந்த பல்லக்கு ஒன்று வந்து கொண்டிருந்தது. அதில் இருந்தவர் யார் என்பது நன்கு தெரியவில்லையாயினும் யாரோ சிவனடி

யார் என்றும் இளம் பிராயத்தினர் என்றும் தோன்றியது. சிவிகைக்கு முன்னும் பின்னும் ஜனக்கூட்டம் அதிகமாயிருந்தது. கையில் தாளங்களை வைத்து இனிய ஜங்கார ஓசையை எழுப்பிக் கொண்டு சிலர் பல்லக்கின் முன்னும் பின்னும் பாடிக்கொண்டு வந்தார்கள்.

இடையிடையே "திருச்சிற்றம்பலம்" "ஹரஹர மகாதேவா!" என்ற கோஷங்களுடன் "திருநாரையூர் நம்பி வாழ்க!" "பொல்லாப் பிள்ளையாரின் அருட் செல்வர் வாழ்க!" என்ற கோஷங்களும் எழுந்து வானை அளாவின.

மதுராந்தகர் அந்த ஊர்வலத்தை அருவருப்பைக் கொண்ட கண்களினாலே பார்த்தார். பக்கத்திலிருந்த வீரனைப் பார்த்து ஏதோ கேட்டார். "ஆம்; பல்லக்கிலே வருகிறவர்தான் திருநாரையூர் நம்பி!" என்று அவன் மறுமொழி கூறினான்.

"இருந்தாலும், என்ன தடபுடல்! இந்த ஊரில் நம்மை யாரும் கேட்பாரைக் காணோம்! இந்த நம்பியைச் சூழ்ந்து கொண்டு ஜனங்கள் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறார்களே?" என்றார் மதுராந்தகத்தேவர்.

அந்த ஊர்வலம் இவர்கள் இருந்த இடத்திலிருந்து சற்றுத் தூரத்திலேயே சென்றது. ஆயினும் பல்லக்கின் அருகிலே வந்தவர்களில் ஒருவர், முன்னொரு சமயம் கொள்ளிட நதியைப் படகிலே தாண்டியபோது ஆழ்வார்க்கடியானோடு சண்டையிட்ட வீர சைவர் என்று வந்தியத் தேவனுக்குத் தோன்றியது.

**ம**துராந்தகத் தேவரும் அவருடைய பரிவாரங்களும் அரண்மனை வீதியை அடைந்து செம்பியன்மாதேவியின் மாளிகையை அடைந்தார்கள். அரண்மனை வாசலிலேயே பெரிய பிராட்டி நின்று கொண்டிருந்தார். யாரையோ வரவேற்பதற்கு ஆயத்தமாக அவர் காத்திருந்ததாய்த் தோன்றியது. மதுராந்தகர் ரதத்திலிருந்து இறங்கி அன்னையின் அருகில் சென்று வணங்கினார். வணங்கிய மதுராந்தகரை உச்சி மோந்து அன்னை ஆசி கூறினார். பின்னர், "மகனே! நல்ல தருணத்தில் வந்து விட்டாய்! திருநாரையூர் நம்பி வந்து கொண்டிருக்கிறார். அவசியமானால் சற்று சிரம பரிகாரம் செய்து கொண்டு விரைவில் சபா மண்டபத்துக்கு வந்து சேர்!" என்று கூறினார்.

மதுராந்தகரின் முகம் பொலிவு இழந்ததை வந்தியத் தேவன் கவனித்துக் கொண்டான். பாவம்! தம்மை வரவேற்பதற்காகவே பெரிய பிராட்டி அரண்மனை வாசலில் காத்திருந்ததாக மதுராந்தகர் எண்ணியிருந்தார் போலும்! என்ன ஏமாற்றம்! பல்லக்கிலே பின்னால் ஊர்வலமாக வரும் சிவனடியாரை வரவேற்பதற்குத்தான் அவர் காத்திருந்தார் என்று தெரிந்ததும் மதுராந்தகருக்கு,—நாளைக்குச் சோழ சிம்மாதனத்தில் ஏறலாம் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருப்பவருக்கு,—மிக்க ஏமாற்றமாயிருப்பது இயல்புதானே?

அரண்மனையில் மதுராந்தகருக்கு என்று ஒதுக்கப்பட்டிருந்த பகுதிக்கு எல்லாரும் சென்றார்கள். மதுராந்தகர் உடை மாற்றுதல் முதலிய காரியங்களைச் சாவகாசமாகவே செய்து கொண்டிருந்தார். சபா மண்டபத்துக்குப் போக அவ்வளவாக ஆர்வம் கொண்டிருந்ததாய்த் தெரியவில்லை. அன்னையிடமிருந்து ஆள்மேல் ஆள் வந்து கொண்டிருந்தனர். கடைசியாக, மதுராந்தகர் புறப்பட்டார். புறப்பட்டபோது "அந்த நிமித்தக்காரன் எங்கே?" என்று வினவினார். அவருடன் சபா மண்டபத்துக்குப் போகத் துடி துடித்துக் கொண்டிருந்த வந்தியத்தேவன் "இதோ ஆயத்தமாயிருக்கிறேன்" என்றான். அவனையும் இன்னும் சிலரையும் அழைத்துக் கொண்டு மதுராந்தகர் சபா மண்டபம் போய்ச் சேர்ந்தார்.

மண்டபத்தில் ஏற்கெனவே சபை கூடியிருந்தது. ஒரு பக்கத்தில் செம்பியன்மாதேவியும் குந்தவைப் பிராட்டியும் மற்றும் சில அரண்மனைப் பெண்களும் வீற்றிருந்தார்கள். சபையில் நடுநாயகமாகப் போட்டிருந்த பீடத்தில் ஒரு வாலிபர் அமர்ந்திருந்தார். அவர் இளம் பிராயத்தவர். விபூதி ருத்ராட்சதாரி. அவருடைய திருமுகம் களையுடன் பொலிந்தது. அவர் எதிரில் ஓலைச் சுவடிகள் சில கிடந்தன. கையிலும் ஓர் ஓலைச் சுவடியை அவர் வைத்துக் கொண்டிருந்தார். அவர் அருகில் விபூதி ருத்ராட்சதாரியான பெரியவர் ஒருவர் பரவசமாக நின்றார். இன்னும் சபா மண்டபத்தில் ஜனங்கள் நிறைந்திருந்தார்கள். இளைஞர் பல்லக்கிலே வந்தவர்தான் என்பதையும், பக்கத்திலே நின்றவர் முன்னொரு தடவை தான் கொள்ளிடத்துப் படகில் பார்த்தவர் என்பதையும் வந்தியத்தேவன் கண்டு கொண்டான். அவனுடைய கண்கள் சபா மண்டபத்தில் அங்கு மிங்கும் சுற்றிச் சுழன்றாலும் கடைசியில் பெரிய பிராட்டிக்கு அருகில்

வீற்றிருந்த குந்தவையின் திருமுகத்திலேயே வந்து நின்றன. குந்தவை தேவியின் கண்களோ முதல் முறை அவனைப் பார்த்ததும் வியப்புக்கு அறிகுறியைக் காட்டின. பிறகு அவன் பக்கம் இளவரசியின் கண்கள் திரும்பியதாகவே தெரியவில்லை. தன்னை ஒரு வேளை தெரிந்து கொள்ள வில்லையோ என்றுகூட அவனுக்கு ஐயம் உண்டாயிற்று.

மதுராந்தகர் சபா மண்டபத்தில் பிரவேசித்ததும் பெண்மணிகளைத் தவிர மற்றவர்கள் எழுந்து மரியாதை செய்தார்கள். மதுராந்தகர் தம் பீடத்தில் அமர்ந்ததும் மற்றவர்களும் அவரவர்களுடைய இடத்தில் உட்கார்ந்தார்கள்.

செம்பியன் மாதேவி மதுராந்தகரைப் பார்த்து, "குமாரா! இந்த இளம் நம்பி திருநாரையூரைச் சேர்ந்தவர். அவ்வூரிலுள்ள பொல்லாப் பிள்ளையாரின் பூரண அருளைப் பெற்றவர். இதுவரையில் யாருக்கும் கிடைக்காத தேவாரப் பதிகங்கள் சில இவருக்குக் கிடைத்திருக்கின்றன. முன்னொரு காலத்தில் நமது சோழ குலத்தில் உதித்த மங்கையர்க்கரசியார் பாண்டிமா நாட்டின் மகா ராணியாக விளங்கினார். அவருடைய அழைப்புக் கிணங்கி ஆளுடைய பிள்ளையார் ஞானசம்பந்தர் மதுரைமா நகருக்குச் சென்றார். அங்கே சமணர்களை வாதப் போரில் வென்றார். அச்சமயம் மதுரைமாநகரில் சம்பந்த சுவாமி பாடிய பதிகங்கள் சில இவருக்குக் கிடைத்திருக்கின்றன. அந்தப் பதிகங்களில் நமது சோழ குலத்து மாதரசியைப் பற்றியும் சம்பந்தர் பாடி யிருக்கிறார். அந்தப் பாடல்களைக் கேட்கும் போது எனக்கு உடல் பூரித்துப் பரவசமாகிறது. உன் தந்தை இருந்து கேட்டிருந்தால் எவ்வளவோ மகிழ்ச்சி யடைந்திருப்பார். நீயாவது கேள்!" என்று சொன்னார்.

மதுராந்தகர் "கேட்கிறேன், தாயே! பதிகத்தை ஆரம்பிக்கட்டும்" என்றார். ஆனால் அவருடைய முகம் அவ்வளவாக மலர்ந்திருக்கவில்லை. அவருடைய உள்ளம் வேறு எங்கேயோ இருந்தது. திருநீறு ருத்ராட்சம் அணிந்த சாதாரண சிறுவன் ஒருவனைப் பெரியதொரு பீடத்தில் நடு நாயகமாக அமர்த்தித் தடபுடல் செய்வதும் அவருக்குப் பிடிக்கவில்லை. அன்னையைத் திருப்தி செய்வதற்காகப் பொறுமையுடன் உட்கார்ந்திருந்தார்.

பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற திருநாரையூர் நம்பி யாண்டார் நம்பி தம்



கையிலிருந்த ஓலைச் சுவடியிலிருந்து படிக்கத் தொடங்கினார். ஞான சம்பந்தர் மதுரைமா நகரைப் பார்த்ததும், "சிவ பக்திச் செல்வத்திற் சிறந்த மங்கையர்க்கரசியார் வாழும் பதி அல்லவா இது?" என்று வியந்து பாடிய பதிகங்களை முதலில் அவர் பாடினார்.

"மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை
வரிவளைக்கைம்மட மானி
பங்கயச்செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடோறும் பரவப்
பொங்கழலுருவன் பூத நாயகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாயாவதும் இதுவே!"

"மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும்
மணி முடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி
பாங்கினாற் பணி செய்து பரவ
விண்ணுளோர் இருவர் கீழொடுமேலும்
அளப்பரிதாம் வகை நின்ற
அண்ணலார் உமையோடு இன்புறுகின்ற
ஆலவாயாவதும் இதுவே!"

என்னும் பாடல்களைக் கேட்டபோது செம்பியன் மாதேவியின் கண்களிலிருந்து முத்து முத்தாக ஆனந்தக் கண்ணீர் சொரிந்தது. அத்தகைய மங்கையர்க்கரசியாரைப் பெற்ற குலத்தில் தாமும் வாழ்க்கைப்பட்டு மகாராணியாக வாழ்ந்திருக்கக் கொடுத்து வைத்திருந்த பூர்வ ஜன்ம பாக்கியத்தை எண்ணி எண்ணி மனம் பூரித்து மகிழ்ந்தார்.

மதுராந்தகருக்கோ மேற்கூறிய பாடல்களில் 'மண்ணெலாம் நிகழ மன்னனால் மன்னும் மணிமுடிச் சோழன்' என்னும் வரி மட்டுமே மனதில் பதிந்தது. அத்தகைய புராதன பெருமை வாய்ந்த சோழர் குலத்து மணி மகுடம் தன் சிரஸை அலங்கரிக்க வேண்டியதிருக்க, இன்னொருவர் அதை அபகரித்துக்கொண்டிருப்பதை நினைத்தபோது அவருக்கு ஆத்திரம் உண்டாயிற்று.

சம்பந்தர் மங்கையர்க்கரசியாரைப் போய்ப் பார்க்கிறார், பாண்டிமாதேவி அந்தப் பாலகரைப் பார்த்து, "ஐயோ! இந்த இளம் பிள்ளை எங்கே? பிரம்ம ராட்சதர்கள் போன்ற சமணர்கள் எங்கே? இந்தப் பிள்ளை அவர்களுடன் எப்படி வாதப் போரிட்டு வெல்ல முடியும்!" என்று கவலையுறுகிறார். அதை யறிந்த சம்பந்தர் பாண்டிமாதேவியைப் பார்த்துச் சொல்லுகிறார்:—



"மானினேர் விழி மாதராய் வழுதிக்கு
மாபெருந் தேவி கேள்!
பானல்வாயொரு பாலன் ஈங்கிவன்
என்று நீ பரிவெய் திடேல்!
ஆனை மாமலையாதியாய
இடங்களிற் பல அல்லல் சேர்
ஈனர்கட் கெளியேன் அலேன் திரு
ஆலவாயரன் நிற்கவே!"

என்ற பதிகத்தைத் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி பாடிய போது, செம்பியன் மாதேவி தம்மையே மங்கையர்க்கரசியாகவும், பதிகம் பாடிய நம்பியையே ஞானசம்பந்தராகவும் பாவனை செய்து கொண்டு இந்த உலக நினைவையே மறந்து மனம்பூரித்தார்.

மதுராந்தகத்தேவரோ "ஆம்; நான் இளம் பிராயத்துச் சிறு பிள்ளைதான்! ஆனால் திருக்கோவலூர் மலையமானுக்கும் கொடும்பாளூர் பூதி விக்கிரம கேசரிக்கும் அவர்களுடைய ஆதரவைப் பெற்ற சுந்தரச் சோழரின் புதல்வர்களுக்கும்

அஞ்சிவிட மாட்டேன். சம்பந்தருக்கு ஆலவாயரன் அருள் இருந்தது போல் எனக்கும் பழுவேட்டரையர் உதவி இருக்கிறது!'' என்று எண்ணிக் கொண்டார்.

வந்தியத் தேவனுடைய செவிகளில் பாடல் ஒன்றும் புகவே யில்லை. அவனுடைய கண்களும் கருத்தும் குந்தவை தேவியினிடமே முழுதும் ஈடுபட்டிருந்தன. இளைய பிராட்டி ஒருகால் தன்னைத் தெரிந்து கொள்ளவே யில்லையா, தெரிந்து கொண்டும் பராமுகமா, அல்லது தன்னிடம் ஒப்புவித்த காரியத்தை நிறை வேற்றி விட்டு வந்து உடனே சொல்லவில்லை என்ற கோபமா?-என்று இப்படி அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது. அத்துடன், இளைய பிராட்டியைத் தனிமையில் எப்படிச் சந்திப்பது, சந்தித்துச் செய்தியை எப்படிச் சொல்லுவது என்றும் அவன் யோசனை செய்து கொண்டிருந்தான்.

• • •

**பா**டல்கள் முடிவடைந்ததும் செம்பியன் மாதேவி நம்பியாண்டாருடன் வந்திருந்த பெரியவரைப் பார்த்து, "ஐயா! இந்த இளம் பிள்ளையைப் பார்த்தால் ஞான சம்பந்தரே மீண்டும் வந்து அவதரித்திருப்பது போலத் தோன்றுகிறது. இவரை அழைத்துக் கொண்டு தமிழகமெங்கும் ஊர் ஊராகச் செல்லுங்கள். அங்கங்கே கிடைக்கும் தெய்விகமான தேவாரப் பதிகங்களைச் சேகரித்துக் கொண்டு வாருங்கள். அப்பர் பதிகங்களையும், சம்பந்தர் பதிகங்களையும், சுந்தரமூர்த்தியின் பாடல்களையும் தனித் தனியாகத் தொகுக்க வேண்டும். சிவாலயங்கள் எல்லாவற்றிலும் தினந்தோறும் பாடச் செய்ய வேண்டும். இது என் கணவருடைய விருப்பம். அதை என் வாணாளில் நிறைவேற்றிப் பார்க்க ஆசைப்படுகிறேன். நீங்கள் ஊர் ஊராய்ப் போவதற்கு வேண்டிய சிவிகைகள், ஆட்கள், பரிவாரசாதனங்கள், எல்லாம் அளிப்பதற்கு ஏற்பாடு செய்கிறேன். சக்கரவர்த்தியின் அநுமதியைக் கோரி என் குமாரனிடமே செய்தி சொல்லி அனுப்புகிறேன்!'' என்றார். அச்சபையில் அப்போது எழுந்த கோலாகலமான கோஷங்கள் மதுராந்தகரின் செவிகளுக்கு நாராசமா யிருந்தன.



நாக்பூர் விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட் ஹாலில் சென்ற மாதக் கடைசியில் 'காதலர் கண்கள்' என்னும் நாடகத்தை நாக்பூர் தென்னிந்திய மாதர் சங்கத்தார் தங்கள் கட்டிட உதவி நிதிக்காகத் திறமையாக நடித்துக் காட்டினர். அந்நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்ட நடிகர்களையும், 'ஜெயசிங் வேஷத்தில்' தோன்றிப் பிரமாதமாக நடித்த மேற்படி சங்கத்தின் கௌரவக் காரியதரிசி ஸ்ரீமதி கமலா மணியையும் படத்தில் காணலாம்.

# வட்ட மேஜை

## ஏன், இந்தப் போட்டி?

அழகுப் போட்டியில் சில குறிப்பிட்ட பெண்கள்தான் 'அழகி'கள் எனத் திட்டமாகக் கூற முடியாது. ஏனெனில் சில பெண்கள் நல்ல சிவப்பு மேனியழகில் இருப்பார்கள். இன்னும் சிலர் வெளுப்பு நிறத்தில் அழகாக இருப்பார்கள். இன்னும் பலர் கருமை நிறத்திலே அழகாக இருப்பார்கள். ஆனால் கருப்பு நிறத்தை எவருமே விரும்புவதில்லை. ஆனால் அழகு கருப்பிலும் இருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியுமா!

பட்டணங்களில் முகமெல்லாம் அரிதாரம், பவுடர் முதலிய பூச்சுக்களை நன்றாக அப்பிப் பூசிக்கொண்டும் உதடுகளில் 'லிப்ஸ்டிக்'கைப் பூசிக்கொண்டும் செயற்கை வளைவுப் புருவத்தைத் தீட்டிக்கொண்டும், "தளதளா" வென மின்னும் பட்டாடைகளை உடுத்திக் கொண்டும், கையில் நாகுக்காக ஒரு 'பிளாஸ்டிக்' பையைப் பிடித்திருப்பதுந்தான் அழகா! இல்லை, இல்லவே இல்லை.

நம் நாடு இருக்கும் நிலைமைக்கு இந்தப் போட்டியை யார் வைக்கச் சொன்னார்கள்! ஒரு பக்கம் உணவுப் பஞ்சம், மறுபக்கம் தண்ணீர்ப் பஞ்சம். இன்னும் பல பஞ்சங்கள் உலாவும் இச்சமயத்தில் ஏனோ இந்த அவலட்சணப் போட்டி!

ஆரணி
14—3—52 டி. வி. ரங்கசாமி

★

## ஆரம்ப ஆசிரியர்கள்

சென்னை மேல் சபைக்கு உபாத்தியாயர்களுக்காக ஆறு ஸ்தானங்கள் ஒதுக்கப் பட்டிருப்பது பற்றி யாவரும் அறிவார்கள். இந்த ஸ்தானங்களில் ஒன்றைக் கூட ஆரம்ப ஆசிரியர்கள் பெற முடியாது. ஏனெனில் அவர்களுக்கு வாக்குரிமையே கிடையாது. நாட்டிலுள்ள உபாத்தியாயர்களில் 75 சத விகிதத்துக்கு மேற்பட இருக்கும் ஆரம்ப ஆசிரியர்களுக்கு வாக்குரிமை இல்லாத நிலை வருந்தத்தக்க தொன்றாகும். இவ்வாறு வாக்குரிமை வழங்க நம் அரசியல் சட்டத்திலேயே இடமில்லை. அரசியல் சட்டத்தில் 171 (3) (c) பிரிவின்படி, 'பார்லிமெண்டு சட்டத்தின் மூலம் மாகாணத்திலுள்ள எந்தப் பள்ளிகள் குறிப்பிடப் படுகின்றனவோ, (செகண்டரி பள்ளிகளுக்குக் கீழ்ப்படாத) அவ்வப் பள்ளிகளில் மூன்றாண்டுகளுக்கு மேல் தொழில் புரிந்து வரும் ஆசிரியர்களால் மேல் சபையின் மொத்த அங்கத்தினர்களில் பன்னிரண்டில் ஒரு பாகம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.'

ஆரம்ப ஆசிரியர்கள் தான் கல்லாதவனைக் கற்றவனுக்குவதில் உள்ள முதற் கஷ்டங்களை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்பவர்கள். தம் குறைந்த ஊதியத்தின் காரணமாக வாழ்க்கை வசதிகளைப் பெற முடியாத வண்ணம் உள்ளனர். கல்வியைப் பரப்ப வேண்டும் என்ற நோக்கம் உள்ள இந்நாளில் சட்ட சபைகளில் ஆலோசனை கூறவும் ஆரம்ப ஆசிரியர்கள் அச்சபைகளில் இருத்தல் வேண்டும். எனவே, மக்களின் புதிய பிரதிநிதிகள் அரசியல் சட்டத்தின் 171 (3) (c) பிரிவிலுள்ள "...செகண்டரி பள்ளிகளுக்குக் கீழ்ப்படாத" என்ற சொற்களை எடுத்துவிடப் பார்லிமெண்டில் பாடுபட வேண்டும்.

மேலும், அரசியல் சட்டத்தின் 171 (5) பிரிவுப்படி இலக்கியம், விஞ்ஞானம், கலை, கூட்டுறவு இயக்கம், சமூக சேவை முதலியவற்றில் அறிவும், அனுபவமும் உள்ள பன்னிரண்டு நபர்களைச் சென்னை கவர்னர் மேல் சபைக்கு நியமனம் செய்ய வேண்டும். ஆரம்ப ஆசிரியர்கள் மக்கள் இலக்கியத்திலும் சமூக சேவையிலும் அநுபவமும் அறிவும் உடையவர்கள் என்பது தெளிவு. எனவே நம் கவர்னர் ஆரம்ப ஆசிரியர்களில் குறைந்தது மூவரையாவது மேல் சபைக்கு நியமனம் செய்வாரென நம்புகிறோம்.

செங்கற்பட்டு
15—3—52 பி. என். கிருஷ்ணன்

★

## இது நியாயமா?

காங்கிரஸ் கட்சியினர் மட பார்ட்டிகளில் கலந்து கொள்வது பிசகு. நடந்த பொதுத் தேர்தலில் என்றும் கண்டிராத தோல்வியைச் சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் கண்டது. காரணம், மக்களிடையே போதிய பிரசாரம் இல்லை. உணவுப் பஞ்சம் வேறு, சாமான்களின் விலையேற்றம் எல்லாமாகச் சேர்ந்து எதிர்க் கட்சியினர் பிரசாரம் செய்ய நல்ல வாய்ப்பாக ஏற்பட்டுவிட்டது. ஆந்திராவில் சில ஜில்லாக்களின் பஞ்சம் காரணமாக மக்கள்படும் அவதியைப் பத்திரிகையில் கண்டேன். பஞ்சத்தால் வாடும் மக்களுக்குத் தலைவர் நேருஜி ஒரு லக்ஷ ரூபாய் அனுப்பி மக்களின் கஷ்டங்களைத் தீர்க்க ஆவன செய்யுங்கள் என்று கூறுகையில் சில காங்கிரஸ்காரர்கள் மடபார்ட்டிகளிலும் அழகிகள் போட்டியிலும் ஈடுபடுவது நியாயமா!

கும்பகோணம்
18—3—52 எஸ். முத்துஸ்வாமி

★

## உடலுறுதி வளருமா?

இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் நடந்த 'கேள்வித் தாள் அவுட்டாகி விட்டது' என்ற பிரச்னை மறுபடியும் இன்று சென்னை மாகாணத்தில் உலவுகிறது.

'நாட்டின் பலம்—நாட்டிலுள்ள இளைஞர்களைப் பொறுத்துத் தானிருக்கிறது' என்று நமது அரும்பெரும் தலைவர்கள் அடிக்கடி கூறியிருக்கிறார்கள். காந்தியடிகள்கூட 'நாட்டின் இளைஞர்களிடத்தில்தான், நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன்' என்று கூறினர்.

இப்பொழுதிருக்கும் பாடத் திட்டத்தின்படி நமது சர்வகலாசாலைகள் உண்மையில் ஒட்டி உலர்ந்த கன்னங்களும் குழிவிழுந்த கண்களுமான இளைஞர்களைத்தான் நாட்டுக்கு உற்பத்தியாக்கித் தருகிறது. எவ்வாறெனில் 'பரீட்சை என்னும் பாதகம்' ஒன்றில் தேறினாலன்றிக் குமாஸ்தா வேலை கிடைக்காது என்ற நிலை மாணவர்களுக்கு ஏற்பட்டு விடுகிறது. அதன் காரணமாகப் பாஸ் செய்ய வேண்டும் என்ற கருத்தில் மாணவர்கள் விழுந்து விழுந்து படிக்கிறார்கள்.

பலன் கிடைப்பது ஒருபுறமிருக்கட்டும். 'அப்பாடா! ஒருவழியாகப் பரீட்சை முடிந்துவிட்டது' என்று பெருமூச்சுவிடும் மாணவர்களுக்குக் 'கேள்



கிராமவாசி:—எனக்கு பாங்கிகள் மேலே நம்பிக்கையே கிடையாது, ஸார்! அதனாலே நான் என் பணத்தை ஒரு பத்திரமான இடத்திலே புதைத்து வைத்திருக்கிறேன்!

நண்பர்:—அது சரி. ஆனால் வட்டி நஷ்டமாகி விடுமே!

கிராமவாசி:— வட்டிக்கு என்று தனியாக மாசா மாசம் கொஞ்சம் அதிகமாகப் போட்டுக் கொண்டு வருகிறேனே!

வித்தான்கள் அவுட்டாகி விட்டதின் காரணமாகப் பரீட்சை ஒத்திப் போடப்பட்டிருக்கிறது' என்று பத்திரிகைகளில் செய்தி வந்தால் அவர்கள் உள்ளம் எப்படியிருக்கும்! ஒரு மாதத்திற்கு மேலாகப் படித்து உடல் நலிந்தது மல்லாமல் மறுபடியும் படிக்கவேண்டியிருப்பதால் அநேகமாகக் குற்றுயிரான நிலைக்கு வந்து விடுகிறார்கள். இப்படிச் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால் நாட்டில் இளைஞர்கள் உடலுறுதி வளருமா!

காரைக்குடி
25—3—52

மரு. சேதுராமசாமி

★

## பம்பாய் சமாஜங்கள்

**ப**ம்பாயிலுள்ள தென்னாட்டினர்கள் மாதுங்காவில் பஜனை சமாஜம், ஆஸ்திக சமாஜம் என இரு சமாஜங்களை ஏற்படுத்தி, பக்தியின் உதவியால் மறுமையில் மோக்ஷம் கிடைக்கப் பாடுபடுவது மிகவும் சிலாகிக்கத் தக்கது. ஆத்ம விசாரத்தால் ஏற்பட்ட இரு சமாஜங்களும் மேலும் மேலும் தொண்டு செய்யும் என்பது திண்ணம்.

ஆனால் காலம், தேசம், நடையுடை, மொழி பேதங்களால் தென்னாட்டினர்கள் இரண்டு சமாஜங்களை ஏற்படுத்தியுள்ளார்கள். தென்னாட்டினரிடம் ஒற்றுமை இல்லை என்பதைப் பார்க்க வருத்தம் தருகிறது. இரண்டு சமாஜங்களையும் ஒன்றுபடுத்தி, தென்னாட்டினர் ஒற்றுமையுடன் வாழ்தல் வேண்டும்.

சமாஜம் கடவுளின் கோயில். ஆண்டவனுடைய கோயில் புனிதமானது; நம் தேகமும் ஆண்டவனுடைய கோயில். கடவுளை வழிபடுவோருடைய சிரத்தை, மனச் சுத்தியின் மூலம் சமாஜம் பலம் பெறுகின்றது. இப்படிப் புனிதமும் பலமும் பெற்ற சமாஜத்தில் ஏன் இரண்டு பிரிவுகள்!

காலம், தேசம், நடையுடை, மொழி என்பவை மனோமயமான எண்ணங்கள். அகந்தை உண்டாயின் அனைத்தும் உண்டாகும். அகந்தையுடன் கூடி, "நான்," "இந்த சமாஜம்' என்னும் அடிப்படை எண்ணம் உண்டானவுடன் இந்த மனோமயமான எண்ணங்கள் உண்டாகும். ஆன்மாவே சத்யம் என்பதை உணர்ந்து, ஓரே சமாஜம் நிறுவ வேண்டும். நான் பிறர் என்று எண்ணாமல், தன் உண்மை நிலையினின்றும் நழுவாமல் இருந்தால், அன்னியமாய் யார் உண்டு! "நான்," "இந்த சமாஜம்," என்னும் மன மாசுகளை நீக்கிக் கொண்டால் உயர்ந்த நிலை தானே வந்து சேரும்; இதில் விவாதம் ஏன்! சண்டை ஏன்! இன்றே முதல் பணியாக இரண்டு சமாஜங்களையும் இணைத்து, ஓரே சமாஜம், ஓரே இனம் என அனைவரும் உணரச் செய்தல் வேண்டும். இப்பணியில் இறைவன் துணை புரிவாராக.

மாதுங்கா
24—3—52

எஸ். மங்களப் பிரசாத்

★

## மனிதன் எப்படித் தாழ்கிறான்?

**ம**னிதன் 'எப்படி உயர்கிறான்!' என்று ஆராய்வதுபோல், நம் நாட்டில் 'மனிதன் எப்படித் தாழ்கிறான்!' என்றும் ஆராய வேண்டும்.

நம் நாட்டில் மனிதன் சோம்பலினால் தாழ்கிறான். பேராசையினால் தாழ்கிறான். தலைவர்களைத் தூஷிப்பதால் தாழ்கிறான். ஒற்றுமை இன்மையால் தாழ்கிறான். பொறுமையால் தாழ்கிறான். அரும் பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தை, ஆயிரக்கணக்கானவர்கள் உயிரைத் தியாகம் செய்து பெற்ற கிடைத்தற்கரிய சுதந்திரத்தை இழப்பதற்கு முயற்சி செய்வதால் தாழ்கிறான். நம் நாட்டுப் பழமையான உயர்ந்த பண்பாடுகளை அவமதித்துப் பிறநாட்டுப் பழக்கங்களைப் பின்பற்ற முயன்று, அதில் தோல்வியடைந்து, இரண்டுமில்லாமல் 'திரிசங்கு சுவர்க்கத்தில்' திண்டாடுவதால் தாழ்கிறான். இறுதியாக, இவ்வளவிற்கும் காரணமான நம் நாட்டுச் சினிமாப் படங்களால் படுகுழியில் விழுகிறான்.

'பாடுபட்டு உயர்ந்த ஏழை' கந்தனைப்போல் நம் நாட்டில் அநேக ஏழைகள் பாடுபடுபவர்களாக இருக்கலாம். ஆனால், அவர்கள் முன்னேறுவதற்கு வழியில்லாமல் அவர்களைக் கீழே தள்ளிச் சோம்பேறிகளாக்குவதில், நம் நாட்டுப் படங்கள் முக்கியப் பங்கை எடுத்துக் கொண்டிருக்கின்றன.

மேல் நாட்டில் உள்ளதுபோல் நம் நாட்டிலும், உயர்ந்த படங்களை எடுப்போருக்குப் பரிசு அளிக்க வேண்டும். உழைப்பின் பெருமையை உணர்த்தும் படங்களே அதிகமாக வெளிவர வேண்டும். அப்பொழுதுதான் பாரத நாட்டின் பெருமை எட்டுத் திக்கிலும் பரவும்; நாடும் சிறப்படையும்.

காலடி
25—3—52

எம். லலிதா

★

## "கோழைகளா?"

**பு**துமைப் பெண் எழுதியிருந்த "சமூகம் முன்னேறுமா!" என்னும் விஷயத்தைப் படித்ததும் என் போன்ற வாலிபர்கள் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல இருக்கிறது. ஆண்களைக் கோழைகளாக்கி உணர்ச்சி அற்றமரக்

கட்டைகளாக்கி, மனிதனிடம் அற்ற பேடிகளாக்கி விட்டார்கள் படமுதலாளிகள். சகோதரி எழுதியதுபோல 'சம்சாரம்' மனிதனைக் கேவலம் ஒன்றுக்கும் உதவாத ஒரு ஜடப் பொருளாக்கி விட்டது. ஆனால் சகோதரி நினைப்பதுபோல எல்லா ஆண்களும் சம்சாரத்தில் வந்த கதாநாயகனைப்போல் இருக்க மாட்டார்கள் என்று கூற விரும்புகிறேன்.

அந்தியடி.
22—3—52 ''புரட்சி மோகன்''

★

## வெட்கப் படத்தான் வேண்டும்!

மார்ச் 9-ந்தேதி "கல்கி"யில் வட்டமேஜைப் பகுதியில் ஸ்ரீ டி. என். நாகரத்தினம் எழுதியுள்ள கடிதத்தைக் கண்ணுற்றேன். " மனிதன் பலஹீன உணர்ச்சிக்கு அடிமையாவதால் ஏற்படும், பலா பலன்களையும் படங்கள் சித்திரிக்க வேண்டும். இவை சம்சாரத்தில் உள்ளன. இன்று கண்கூடாகப் பார்ப்பதை ஏன்படத்தில் காட்டக் கூடாது!" என்று கேட்டிருக்கிறார். அவர் 'சினிமா' பொழுது போக்கு என்று மட்டும்தான் நினைக்கிறார் போலும்.

சினிமா பொழுதுபோக்கு மட்டுமல்ல. ஸ்ரீ டி. வி. ராமானுஜம் எழுதியமாதிரி, சினிமா ஒரு பிரசார யந்திரம். சினிமா மனிதப் பண்பை, நாட்டு நாகரிகத்தை, கலாசாரத்தை, எல்லாவற்றிற்கும் மேலாக, மனிதனுடைய தன்னம்பிக்கையை உயர்த்த வேண்டும். ஸ்ரீ டி. என். நாகரத்தினம் கூறுகிறார் — குடும்பத் தொல்லை காரணமாக, கடமைப் பொறுப்பைத் துறக்கும் மனநிலை ஏற்படுவது சகஜந்தான் என்று. இதைச் 'சம்சாரம்' பிரதிபலிக்கிறது என்று கூறுகிறார். இதைக் காட்டுவது தவறில்லைதான். ஆனால் கூடவே, அவன் உழைப்பில் உயர்வு அடையும் நிலை, தன்னம்பிக்கை காரணமாகத் தன் வாழ்வை வளமாக்கும் நிலை இவற்றைக் காட்டி யிருந்தால் நன்றாக இருக்கும். அதுதான் படத்திலில்லை.

அரைப் பைத்தியமான கதாநாயகனின் தம்பி, எதிர்பாராத விதமாக, ஒரு பணக்கார அழகியைக் காதலிக்கிறான். பின் கதைப் போக்கில் அவன் நிலை உயர்ந்து விடுகிறது. பிறகு குடும்பம் ஒன்று சேர்ந்து செழிப்படைகிறது. இதைப் பார்க்கும் பாமர ஜனங்கள், " இதுபோல் அதிர்ஷ்டம் நம் வாழ்வில் தோன்றாதா!" என்றுதான் எண்ணுகிறார்கள். தன்னம்பிக்கை, உண்மையான உழைப்பு இவற்றை மறந்து விடுகிறார்கள்.

நமது நண்பர் 'ஜெக்கோ ஸ்லோவேகியா' நாட்டு "Inspiration" என்ற துண்டுப் படத்தைப் பார்த்திருப்பார் என்று எண்ணுகிறேன். ஒரு கவியின் கனவு, காண்போர், கண்ணுக்கு விருந்தளிக்கும் முறையில் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. அதுபோன்ற படங்கள் தேவை. சினிமாப் படங்கள் பொழுது போக்குக்காக மட்டும் இருக்கக் கூடாது. புதுமையான சமுதாயத்தை உருவாக்கும் படங்களாக இருக்க வேண்டும். வெளிநாடுகளின் நல்ல படங்களைப் பார்த்தபின், ஒரு நல்ல துண்டுப் படங்கூட நம் நாட்டில் இல்லையே என்று வெட்கப் படத்தான் வேண்டி யிருக்கிறது.

சென்னை
22—3—52 ஜி. பி. கந்தசுவாமி

★

## தகுதி வேண்டும்!

கோவை ஸ்ரீ சுப்பையா அவர்கள் போட்ட போடு, தமிழ்நாடு சம்பந்தப்பட்ட அனைவரும் கருத்திற் கொள்ள வேண்டியது அவசியம். ஏனெனில் தமிழ் நாட்டில் சில இடங்களில் கிராம, தாலுகா, ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளில் உள்ள நிர்வாகிகளில் சிலர் தகுதி இல்லாதவர்களும், எப்படியோ தமது பதவிகளை விடாமல் பற்றிக் கொள்வதில் கருத்தைச் செலவிடுகின்றனரே தவிர, காங்கிரஸ் நிர்மாண திட்டங்களை மக்களிடையே சமர்ப்பிக்கத் தவறுகிறார்கள். இதனால் ஏற்பட்ட, ஏற்படும் பலாபலன்களைப் பற்றிச் சிந்திக்க நேரமில்லை. எனவே இப்படிப்பட்ட தலைவர்கள், 'தாம் அப்பதவிக்குத் தகுதியுடையவர்தானா!' என்பதை யோசித்து விலகிக் கொள்ள வேண்டும். இப்படி அவர்கள் செய்யத் தவறுவார்களானால், அப்படிப்பட்டவர்கள் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்பவர்க ளாவார்கள்.

காங்கிரஸ் மீண்டும் புது வேகத்தோடு செயலாற்ற வேண்டுமானால் — புதிய — ஆனால் தகுதியுள்ள தலைவர்கள் முன் வந்து தலைமைப் பதவியை ஏற்க வேண்டியது மிக மிக அவசியம்.

தோட்டக்குறிச்சி
26—3—52 ம. சி. இருமலைசாமி

# மாதுங்காவில் நாடக விழா

தமிழகத்தை விட்டு நெடுந் தூரத்தில் இருந்துகொண்டு, தமிழுக்குத் தொண்டு செய்து வருவதில் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்துக்கு இணை பம்பாய்த் தமிழ்ச் சங்கம்தான்.

இந்தச் சங்கத்தின் ஆதரவில் ஒரு தமிழ்ப் புத்தகசாலை இருக்கிறது. வாரந்தோறும் இலக்கியப் பிரசங்கங்கள் நிகழ்கின்றன. வள்ளுவர், பாரதி முதலிய தமிழ்ப் பெரியார்களது விழாக்களை உரிய முறையில் கொண்டாடி வருகிறார்கள். பம்பாய்க்கு விஜயம் செய்யும் தமிழ் அறிஞர்களை அன்போடு வரவேற்று அவர்களைப் பம்பாய்த் தமிழர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும் அரும் பணியையும் மேற்படி சங்கம் மேற்கொண் டிருக்கிறது.

இத்தகைய சிறந்த தமிழ்த் தொண்டாற்றி வரும் தமிழ்ச் சங்கத்துக்குச் சொந்தமாகக் கட்டிடம் நிறுவும் நோக்கம், நீண்ட நாளாக இருந்து வருகிறது. அதற்காக ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களைக் கொண்டு அவர்களின் சிறந்த நாடகங்களான "கள்வனின் காதலி", "மனிதன்", "ரத்த பாசம்", "ஔவையார்", "இன்ஸ்பெக்டர்" முதலிய நாடகங்களை 11—4—52 முதல் 15—4—52 வரையில் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

பம்பாய்த் தமிழர்கள் இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு மேற்படி நாடகங்களைக் கண்டு ரஸிப்பதுடன், தமிழ்ச் சங்கக் கட்டிட நிதிக்கும் தாராளமாக வழங்குவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# படித்துப் பாருங்கள்!

## குந்தளப் பிரேமா

சுந்தரமும் குந்தளமும் சிறு வயது முதல் ஒன்றுப் பழகினர்கள். அடுத்த வீட்டில் நடந்த கல்யாணம் குந்தளத்தின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. குழந்தை குந்தளம் தன் அத்தான் சுந்தரத்தோடு கல்யாண விளையாட்டு விளையாடினள். இளம் உள்ளங்கள் ஒன்றுபட்டன. விளையாட்டில் விளைந்த அன்பு விலக்கமுடியாதபடி வலுவடைந்து வந்தது. விளையாட்டு வினையாக முடிந்து விடுமோ என்று சுந்தரத்தின் தாயார் பதறிப் போனுள்; அரும் பாடு பட்டு அவர்களைப் பிரித்து வைத்தாள். 'என்ன இது! இரண்டு குழந்தை உள்ளங்கள் ஒன்று சேர்ந்தால் அதை விட மகிழ்ச்சிதரும் விஷயம் வேறு என்ன இருக்க முடியும்! அதுவும் அத்தை மகனும் மாமன் மகளுமான அக்குழந்தைகள் முறைப்படி மணந்து கொள்ள வேண்டியவர்கள்தானே! இதில் பதறித் துடித்துப் போகும்படி என்ன இருக்கிறது!' என்று கேட்கத் தோன்றும். ஆனால் அந்தப் பல கேள்விகளுக்கும் ஒரே பதில்—குந்தளம் ஒரு பால்ய விதவை என்பதுதான்.

வாழ்க்கை இன்னதென்றே தெரியாத இளம் பருவத்தில் குழந்தை குந்தளம் தன் குழந்தைக் கணவனை இழந்து விட்டாள்; வாழ்க்கை இன்பத்தையும் இழந்து விட்டாள்; மனித உரிமைகளையே அடியோடு இழந்து விட்டாள். ஆகவேதான் சுந்தரத்தையும் குந்தளத்தையும் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொள்ளாதபடி பிரித்து வைக்க வேண்டியது அவசியமாயிற்று.

இதற்குமேல்தான் கதையில் புரட்சிகரமான மாறுதல் விறுவிறுப்போடு ஏற்படுகிறது. விடுவிக்க முடியாத சிக்கல்கள் தோன்றுகின்றன. கதாசிரியன் சுந்தரமும் கதாசிரியை குந்தளமும் இலக்கிய உலகத்தை ஒரு கலக்குக் கலக்குகின்றனர். அவர்களும் உள்ளம் கலங்குகின்றனர். வாசகர்களையும் கலங்க வைக்கின்றனர்.

இந்த நூலுக்கு ஆசிரியர் கல்கி எழுதியிருக்கும் முன்னுரையில், "......இந்தத் தொடர் கதையை நான் முழுமையாக ஒரே மூச்சில் படித்து முடித்தேன். கதையின் சுவையும் தமிழ் நடையும், சரளமும், சம்பாஷணைத் திறனும் என் கவனத்தைக் கவர்ந்து இழுத்துச் சென்று முற்றிற்று என்ற இடத்திலே கொண்டு வந்துதான் நிறுத்தின" என்று கூறுகிருர்.

ஆசிரியர்: கே. வி. எஸ். வாஸ். பிரசுரம்: வீரகேசரி, கொழும்பு, சிலோன்; விலை: ரூ. 2-50.

## எம்பெருமானாருடைய திவ்விய சரிதம்

ஸ்ரீ வைஷ்ணவ மத ஆசாரியரும் மகா ஞானியுமான ஸ்ரீ ராமானுஜாச்சாரியாரின் சரித்திரத்தை அவர்பால் கொண்டிருக்கும் இடையரு நேயம் காரணமாக ஸ்ரீ எம். தேவராஜுலு நாயுடு எழுதியிருக்கிறர். பக்தி யின்பத்தில் ஈடுபட்டு எழுதியிருக்கும் இந்நூலில் அன்னாரது பக்தி விசேஷம் தெளிவாய்க் காணக் கிடக்கிறது.

கிடைக்குமிடம்: எம். தேவராஜுலு நாயுடு, 23, ஜெனரல் முத்தையா முதலித் தெரு, சென்னை-1; விலை: 0-6-0.

## தமிழ் இலக்கிய வரலாறு

அமிழ்தினும் இனிய தமிழ் மொழியின் அரிய வரலாறு சுருக்கமாக இந்நூலில் தரப்பட்டிருக்கிறது. காலம் செல்லச் செல்லப் பல மாறுதல்களை உண்டாக்கிச் செல்வது போல், இலக்கிய வளர்ச்சியும் காலத்துக்கு ஏற்பப் பல மாறுதல்களை அடைகிறது என்பதை ஆசிரியர் படிப்படியாக இந்நூலில் விளக்கியுள்ளார். சங்க காலம், சங்க மருவிய காலம், பல்லவர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம், ஐரோப்பியர் காலம் என்று ஆறு பிரிவுகளாக வகுத்துக் கொண்டு அந்நாளையப் புலவர்களையும் அவர்கள் தந்த நூல்களையும் பற்றி ஆசிரியர் தெளிவாக எழுதியுள்ளார்.

ஆசிரியர்: வி. செல்வநாயகம் எம். ஏ., கிடைக்குமிடம்: ஸ்ரீ லங்கா புத்தக சாலை, வண்ணார் பண்ணை, யாழ்ப்பாணம்; விலை: ரூ. 3—75.

## கல்வியில் பெரியவர் கம்பர்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கம்பருக்கு ஈடாக ஒரு கவி இந்த உலகத்தில் கம்பருக்கு முன்னும் பிறக்கவில்லை; பின்னும் பிறக்கவில்லை. இந்த அபிப்பிராயத்தையே பல மொழிகள் பயின்ற வ. வே. சு. ஐயர் போன்ற அறிஞர்கள் கூறினர். ஆயினும் பரவலாகக் கம்பரின் பெருமை தமிழ்ப் பொது மக்களுக்கு விளக்கும் முறையில் பல நூல்கள் தமிழில் வரவில்லை. அந்தக் குறையை ஓரளவு இந்நூல் நீக்குகிறது. கம்பருடைய கவிதைப் புலமையை மேனாட்டு விமர்சன முறையில் ஆராய்ச்சி செய்து இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே, இலக்கிய அன்பர்களுக்கு இந்நூல் பெருநவியாக இருக்கும். கவிமணியும், திரு எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களும் இப்புஸ்தகத்தைப் பெரிதும் பாராட்டியிருக்கிறார்கள்.

ஆசிரியர்: ஏ. வி. சுப்ரமணிய அய்யர், பிரசுரம்: சி. ஜெகந்நாதன், திருநெல்வேலி; விலை: ரூ. 2-8-0.

## இலட்சியவாதி

விரிந்த மனப்பான்மையும் தூய கருத்துக்களும் கொண்ட தந்தை தாமோதரம், தன் தனயன் வீரமணியை இலட்சிய புருஷனாக வளர்க்கிறர். ஆனால் தனயன் பெரியவனாகித் தந்தை போதித்த லட்சியங்களை யெல்லாம், நடைமுறையில் கொண்டுவரப் பார்க்கிறான். அப்போது தந்தையும் சமூதாயமும் இதற்கு இடந் தருவதில்லை. இதனால் தந்தையும் தனயனும் மிக இன்னல் படுகிறார்கள். ஆயினும் தனயன் லட்சியத்தை விடுவதில்லை.

இந்த விஷயத்தை அடிநாதமாகக் கொண்டு எளிய பேச்சுத் தமிழில், ஹாஸ்யம், சோகம், வீரம் ஆகிய பல ரஸங்களுடன் காட்சிகள் அமைத்து இந்த நாடகம் எழுதப்பெற்றிருக்கிறது.

இந்தச் சமூக நாடகத்தை எழுதிய ஆசிரியரே அசோக சக்கரவர்த்தி காலத்தைப் பின்னணியாகக் கொண்டு ஒரு சரித்திர நாடகம் "மனமாற்றம்" என்ற தலைப்பில் எழுதியிருக்கிறர். ஆம், அசோக சக்கரவர்த்தி, கலிங்கப் போர்க்களத்தில் மனமாற்ற மடைந்து அன்பு வழியைப் பின்பற்றி, புத்த மதத்தைச் சேர்ந்த கதையைக் கூறுகிறது.

எழுதியவர்: "மேகலை"; கிடைக்குமிடம்: சுந்தரம் இளங்கோ நிலையம், ஆத்தூர், சேலம். இரண்டும் தனித்தனியே விலை: 12 அணு.




# Advertisers... get the TRUTH about the media you use !

As an advertiser, it is vital for you to know exactly how many readers you get for each rupee spent on advertising.

More than 125 leading publications are now members of the Audit Bureau of Circulations — enough to conduct a full - scale, 13 language national advertising campaign in India, Pakistan and Ceylon. Their circulation figures are subject to re - check at any time by ABC appointed auditors, and are passed on as half - yearly confidential certificates to ABC members.

If you want to know the truth about your advertising media, write today for full details of ABC membership !

**AUDIT BUREAU OF CIRCULATIONS LTD.**
Mubarak Manzil, Apollo Street
Fort, Bombay

The following advertisers and advertising agencies are already members of the ABC :—

ADVERTISERS :

Allied photographics Ltd., E. M. Allcock & Mohatta Ltd. Aspro Ltd England. Atlantis (East) Ltd. Balmer Lawrie & Co. Ltd. Bombay Mutual Life Assurance Society Ltd. Boots Pure Drug Co. (India) Ltd. Burmah - Shell Oil Storage & Distributing Company of India Ltd. Caltex (India) Ltd. Central Tea Board. Corn Products Co. (India) Ltd. Dunlop Rubber Co. (India) Ltd. Glaxo Laboratories (India) Ltd. Godrej & Boyce Mfg. Co. Ltd. Imperial Chemical Industries (India) Ltd. Imperial Tobacco Co. of India Ltd. India Tyre & Rubber Co. (India) Ltd. Lever Brothers (India) Ltd. Lipton Ltd. Mullar & Phipps (India) Ltd. National Carbon Co. (India) Ltd. Parle Products Manufacturing Co. Ltd. Punjabi Chandu Halwai Karachiwala. Shalimar Paint, Colour & Varnish Co. Ltd. Tata Oil Mills Co. Ltd. Volkart Brothers.

ADVERTISING AGENCIES :

Advertising & Sales Promotion Co. Everest Advertising Ltd. Grant Advertising Inc. Greens' Advertising Service Agents. D. J. Keymer & Co., Ltd. Lintas Ltd. National Advertising Service Ltd. Press Syndicate Ltd. Shilpi Ltd. Sista's Ltd. F. D. Stewart Ltd. L. A. Stronach & Co. (India) Ltd. J. Walter Thompson Company (Eastern) Ltd.

**Inserted by the "KALKI" Madras**

THE TAMIL WEEKLY PUBLICATION WITH ABC CERTIFIED CIRCULATION

# ஆத்மநாதனின் அந்தரங்கம்

**வசு**

அன்று ஆபீஸ் விடுமுறை. பகல் சாப்பாடு 'முடிந்ததும் கையில் வெற்றிலை பாக்குப் பெட்டியை எடுத்துக் கொண்டு நான் குடியிருந்த வீட்டுக் குப்புசுவாமியுடன் சீட்டாடுவதற்காகக் கிளம்பினேன். நான் அவசரமாகப் புறப்படும்போது என் மனைவி, "ஆமாம்; இன்றைக்கு ஒரு நாள் சீட்டு விளையாடாவிட்டால்தான் என்ன?" என்றாள். "இதனால் உனக்கென்ன நஷ்டம்?" என்று மறு கேள்வி போட்டேன் நான். "எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை. ஆனால் இதைவிட ஒரு முக்கியமான வேலை உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது" என்றாள். "சரி, சீக்கிரம் சொல்லு" என்றேன் நான் பொறுமையை இழந்து.

"நேற்றைக்குச் சர்மாவின் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் அகமுடையாள் அன்னபூர்ணி மாமி, அவர்கள் கடைசிப் பெண் பிரேமாவின் கல்யாண விஷயமாக என்னிடம் பேசிக் கொண்டிருந்தபோது உங்கள் ஆபீஸில் வேலை செய்கிற ஆத்மநாதனைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள். ஆத்மநாதனுக்கு மூத்தாள் தவறிப் போய் மூன்று நான்கு வருஷங்கள்தான் ஆகிறதாம். அவருக்குப் பிரேமாவை இளையாளாகக் கொடுத்து விடலாம் என்ற யோசனையுடன் சர்மா ஆத்மநாதனைப் போய்ப் பார்த்தாராம். ஆத்மநாதன் திருப்திகரமாகப் பதில் சொல்லவில்லையாம். நீங்கள் ஆத்மநாதனைச் சந்தித்து இதைப் பற்றி வற்புறுத்திச் சொன்னால் ஒரு வேளை அவர் பிரேமாவைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதிக்கலாம் என்று அன்னபூரணி மாமி நினைக்கிறாள். இன்றைக்கு ஆத்மநாதனைப் போய்ப் பார்த்துவிட்டு வர உங்களுக்கு நேரமிருக்குமோ?" என்றாள்.

"ஆத்மநாதனைத்தானே? சரி, இப்போதே போய் அவனிடம் பேசிப் பார்க்கிறேன். என் வார்த்தைக்கு அநேகமாக அவன் மதிப்புக் கொடுப்பான் என்றே நினைக்கிறேன்" என்று சொல்லிவிட்டு உடைகளை மாற்றிக்கொண்டு புறப்பட்டேன்.



ஆத்மநாதன் கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு மாறுதலாகி வந்தது முதல் என்னுடைய செக்ஷனில்தான் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். என்னிடத்தில் அவனுக்கு ஒரு பிரத்தியேக மரியாதை உண்டு. இயற்கையிலேயே அவன் நல்ல குணம் படைத்தவன். அவனுடைய முதல் மனைவி தவறிப்போய் விட்டாள் என்ற விவரத்தை மட்டும் அவன் ஏதோ பேச்சுவாக்கில் என்னிடம் சொல்லியிருக்கிறான். ஆனால் அவன் ஏன் மறு கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்று இது வரையில் நான் அறிய முயன்றதில்லை. சர்மாவும் அவர் மனைவி அன்னபூரணி அம்மாளும் அவர்கள் கடைசிப் பெண் பிரேமாவை ஆத்மநாதனுக்கு விவாஹம் செய்து வைக்கப் பிரயத்தனம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று என் மனைவி தகவல் தெரிவிக்கவே என்னாலான உதவியைச் செய்யவேண்டுமென்று நினைத்தேன். நான் சர்மாவுக்கு மிகவும் கடமைப் பட்டவன். அவரும் என் மாமனாரும் நெருங்கிய நண்பர்கள். அவருடைய மூத்த பெண்ணும் என் மனைவியும் பள்ளித் தோழிகள். நான் சென்னைக்கு வந்ததும் சர்மா எனக்குக் குடியிருக்க வீடு அமர்த்திக் கொடுத்து மற்றும் பல சௌகரியங்களைச் செய்து கொடுத்தார். இயல்பாகவே நல்ல குணம் படைத்த அவரிடத்தில் எனக்கு எப்பொழுதுமே ஒரு தனி மரியாதையும் அன்பும் உண்டு. அவருக்கு உதவி செய்ய ஒரு சந்தர்ப்பம் வாய்க்கவே, அதைப் பயன்படுத்த வேண்டுமென்று முடிவுக்கு வந்தேன்.

மாம்பலத்தில் ஆத்மநாதன் இருந்த வீட்டுக்குப் போய்ச்சேர்ந்தேன். அவன் என்னை அன்புடன் வரவேற்று, "என்ன ஸார், வெய்யிலில் இவ்வளவு தூரம் வந்தீர்கள்?" என்றான்.

"உங்களைப் பார்க்கத்தான்!" என்றேன்.

"நீங்கள் தகவல் சொல்லி அனுப்பி யிருந்தால், நீங்கள் இருக்கும் இடத்திற்கு நானே வந்திருப்பேனே!" என்றான் அடக்கமாக.

"அதனால் பாதகமில்லை. நான் உங்களை நாடி வந்த காரியம் கைகூடினால் எனக்கு ஏற்பட்ட சிரமத்தைப் பொருட்படுத்த மாட்டேன்!" என்றேன் சம்பிரதாயமாக.

"என்னால் முடியுமானால் கட்டாயமாகச் செய்கிறேன்" என்றான் ஆத்மநாதன்.

பேச்சை எப்படித் தொடங்குவது என்று சற்று நேரம் யோசித்து விட்டு, முதன் முதலாக ஆத்மநாதன் மறுமுறையும் கலியாணம் செய்து கொள்ள வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி விட்டு, அதைத் தொடர்ந்து சர்மாவின் பெண் பிரேமாவின் அதிகப் படிப்பு முதலிய மற்ற யோக்யதாம்சங்களையும் எடுத்துரைத்துக் கடைசியாக அவன் மனமுவந்து பிரேமாவைத் தன் இல்லாளாக ஏற்றுக் கொண்டால் அது எனக்கும் என் ஆப்தர் சர்மாவுக்கும் அவன் செய்யும் பெரிய உதவியாயிருக்கும் என்று கூறி முடித்தேன்.

நான் சொல்வதை யெல்லாம் கேட்டுக் கொண்டே வந்த ஆத்மநாதனின் முகபாவம் வெகு துரிதமாக மாறிக் கொண்டே வந்தது. அவன் கண்களில் நீர் மல்கியது. உணர்ச்சி மிகுதியால் அவன் தொண்டையிலிருந்து வார்த்தைகள் தட்டுத்தடுமாறி வெளிப் பட்டன. "ஸார், நீங்கள் என்னை மன்னித்து விட வேண்டும். உங்கள் விருப்பத்தை நான் பூர்த்தி செய்து வைக்க முடியாத நிலைமையில் இருக்கிறேன்" என்றான்.

ஆத்மநாதனின் நிலைமையைக் கண்டதும் கலக்க முற்றேன். அவன் மனத்தை அறிந்து கொள்ளாமல் மறுமுறையும் கலியாணம் செய்து கொள்ளும்படி நாம் யோசனை கூறியது அனுசிதமோ என்று எனக்குத் தோன்றியது. "மிஸ்டர், ஆத்மநாதன்! உங்கள் உள்ளத்தைச் சரியாக அறியாமல் புண்படுத்தி விட்டேன். நீங்கள் ஏகபத்னி விரதர் என்பதை இப்போதுதான் அறிந்து கொண்டேன். நான் செய்த தவறைப் பொருட் படுத்தாதீர்கள்" என்று சொல்லிப் புறப்பட எத்தனித்தேன்.

ஆத்மநாதனின் கண்கள் நீரைப் பெருக்கின. "ஸார், உங்களுடைய போற்றுதலுக்கு நான் கொஞ்சமும் அருகதையற்றவன். ஏற்கெனவே இரண்டு பெண்களின் வாழ்க்கையைக் குலைத்த கிராதகன் நான். என்மேல் நீங்கள் கருணை காட்டாதீர்கள். என் வினைப் பயனை நான் அனுபவிக்கிறேன்" என்றான் ஆவேசம் வந்தவன் போல்.

எனக்குத் தெரிந்த வகையில் ஆத்மநாதனை ஆசுவாசப்படுத்தி, "மிஸ்டர் ஆத்மநாதன்! சென்றதை நினைத்து வருங்கால வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளாதீர்கள். உங்கள் மனப் போக்கைத் தெரிந்து கொள்ளாமல் பேசி உங்கள் பழைய நினைவுகளைக் கிளப்பி விட்டதற்காக நான் மறுபடியும் வருந்துகிறேன்" என்று சொல்லி விட்டு நான் உட்கார்ந்திருந்த நாற்காலியை விட்டு எழுந்தேன்.

என்னை எழுந்திருக்காமல் இருக்கும்படி சமிக்ஞை செய்தான் ஆத்மநாதன். "ஸார், என்னைவிட நீங்கள் வயதில் சற்றுப் பெரியவர். நான் தவறு செய்திருக்கலாம். உங்களிடம் சில தகவல்களை வெளியிடுகிறேன். அவைகளின் முடிவாக நான் கொண்டிருக்கும் வைராக்கியம் சரிதானா என்று நீங்களே தீர்ப்புச் சொல்லுங்கள்!" என்று கூறியபின் ஆத்மநாதன் மேலும் தொடர்ந்தான்.

"ஐந்து வருஷங்களுக்கு முன் திருச்சியில் எம். ஏ. வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தேன். சிறு வயதிலிருந்தே எனக்குச் சங்கீதத்தில் ஒரு மோகம். காலேஜ் படிப்புக்காக திருச்சிக்கு வந்ததும் ஓழிந்த நேரத்தில் வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டேன். என்னுடன் கூடப் படித்துக் கொண்டிருந்த என் நண்பன் சௌம்யன் என்னைப் போலவே சங்கீதத்தில் பற்று உடையவன். ஆனால் என் அளவுக்கு அவனுக்குச் சங்கீதத்தில் ஞானம் கிடையாது. ஒரு தடவை பேச்சு வாக்கில் அவனுடைய ஒன்று விட்ட தங்கை சாந்தினி சென்னையில் வாசித்துக் கொண்டிருப்பதாகவும் வீணை



வாலிபன்:—நான் ஒரு ஏழைப் பெண்ணைக் காதலிக்கிறேன். ஆனால் என் தகப்பனார் ஒரு பணக்காரப் பெண்ணை எனக்காகப் பார்த்திருக்கிறார். நான் இவர்களுக்குள் யாரை மணந்து கொள்ளட்டும்?

நண்பன்:—நீ காதலிக்கும் ஏழைப் பெண்ணைத்தான் மணந்து கொள்ள வேண்டும். அதுதான் நியாயம். உம், அது சரி, அந்தப் பணக்காரப் பெண்ணின் விலாசத்தை உடனே எனக்குக் கொடு!



வாசிப்பதில் அவள் தேர்ச்சி பெற்றிருக்கிறாள் என்றும் சொல்லக் கேட்டிருந்தேன். சாந்தினி அவளுடைய பெற்றோர்களுக்கு ஒரே குழந்தை யென்றும், சிறு வயதிலேயே அவள் தாயாரை இழந்து விட்டாள் என்றும், வடக்கே ராணுவத்தில் நல்ல சம்பளத்தில் வேலையாயிருந்த அவள் தகப்பனார் அவளைச் சென்னை வைத்தியக் கல்லூரியில் சேர்த்திருக்கிறாரென்றும் சாந்தினி அவள் இஷ்டப்பட்ட கணவனைத் தேர்ந்தெடுக்கும் அளவுக்கு அவளுக்குச் சலுகை கொடுத்திருக்கிறார் என்றும் சௌம்யன் மூலம் தெரிந்து கொண்டேன்.

"சாந்தினி லீவுக்காகத் திருச்சி வந்திருந்தாள். சௌம்யனின் வீட்டிற்குப் போயிருந்த போது சாந்தினியை எனக்கு அறிமுகம் செய்து வைத்தான் சௌம்யன். நான் வீணை வாசிப்பதில் பயிற்சியுடையவன் என்றறிந்த சாந்தினி ஒரு நாள் அவர்கள் இருக்குமிடத்திற்கு வந்து என்னை வீணை வாசிக்கும்படி கேட்டுக் கொண்டாள். அதற்கு இசைந்து ஒரு நாள் என்னுடைய வீணையுடன் நான் அங்கே சென்றேன். நான் போகு முன் சாந்தினி தன்னுடைய வீணையுடன்சேர்ந்து வாய்ப்பாட்டு பாடிக் கொண்டிருந்தாள். வீணையின் நாதத்தைப் பழிக்கும்படியாக இருந்தது அவள் குரல். எனக்குத் தெரிந்த கீர்த்தனைகள் சிலவற்றை நான் என்னுடைய வீணையில் வாசித்துக் காட்டினேன்.

"சங்கீதத்தின் மேல் இருந்த இருவருடைய பற்றும் ஒருவர் மற்றொருவருடன் தாராளமாகப் பழகுவதற்கு ஏதுவாக அமைந்தது. கடைசியில் சாந்தினியையே மணந்து கொள்ள வேண்டு மென்ற தீர்மானத்திற்கு வந்தேன். என் படிப்பு முடிந்ததும் உரிய சமயத்தில், என் பெற்றோர்களின் ஸ்தானத்திலிருந்து சிறுவயது முதற்கொண்டு தாய் தந்தையரை இழந்தவனான என்னை வளர்த்து வந்தவரும் வேறு குழந்தைகள் இல்லாதவருமான என் சித்தப்பாவிடம், என் அபிலாஷையை வெளியிடலாமென்று நிச்சயித்தேன். லீவு முடிந்ததும் சாந்தினி சென்னைக்குத் திரும்பினாள். அங்கு சென்றதும் கடிதம் எழுதினாள். பல கடிதங்கள் மூலம் நாங்கள் இருவரும் எங்களுக்குள் நிலவிய பிரேமையைப் பரிமாறிக் கொண்டோம்.

"திடீரென்று என் சித்தப்பாவிடமிருந்து ஒருநாள் கடிதம் வந்தது. ஊருக்குப் போய்ச் சேர்ந்தேன். அவருடைய அபிமான புத்திரனான எனக்கு என் அத்தை பெண் அலமுவைக் கலியாணம் செய்துவைக்க ஏற்பாடுகள் நடத்திக் கொண்டிருப்பதாக என்னிடம் தெரிவித்தார். என் மனசிலுள்ளதைச் சித்தப்பாவிடம் தெரிவித்தேன். சித்தப்பாவின் கோபம் கரை கடந்து போய்விட்டது. 'உன்னைப் பெற்றவர்கள் விட்டுவிட்டுக் கண்மூடிய பின் உன்னை எடுத்து வளர்த்ததற்கு இதுதானா நீ செய்யும் பிரதியுபகாரம்? அலமுவுக்கு என்ன குறைச்சல்? அழகில்லையா? எஸ். எஸ். எல். ஸி. வரைக்கும் அவள் படித்தது போதாதா? பாடத் தெரியாதவளா அவள்? வீட்டு வேலையில் அவளைப்போல பயிற்சி பெற்ற வேறு பெண் தேடினும் கிடைக்குமா? எல்லாவற்றையும் விடத் தாயை இழந்தவள் அவள்! உன்னைத்தான் கலியாணம் செய்து கொள்ளுவேன் என்று என்னிடமே சொல்லியிருக்கிறாள். இதையெல்லாம் யோசிக்காமலிருக்க முடியுமா என்னால்?" என்றார்.

"சித்தப்பாவின் உடல் நிலை அவர் அதிக நாள் உயிரோடிருக்கமாட்டார் என்று எனக்கு அறிவுறுத்தியது. அவருடைய கடைசிகால வேண்டுகோளை நிராகரிப்பதற்கு எனக்குத் தைரியம் இல்லை. ஆகவே சாந்தினியையே கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்று நான் கொண்டிருந்த உறுதி கலகலத்தது.

"நானும் அலமுவும் தம்பதிகளானோம். அதற்குப் பிறகு சித்தப்பா அதிகநாள் உயிரோடிருக்கவில்லை. படிப்பை முடித்துக் கொள்ள மறுபடியும் திருச்சிக்குப் போக எனக்கு மனமில்லை. சௌம்யனைப் பார்க்க எனக்குத் தைரியமில்லை. கல்கத்தாவில் என் பந்து ஒருவர் இருந்தார். அவர் மூலமாகக் கல்கத்தாவில் நாம் இப்பொழுது வேலை செய்யும் இலாக்காவில் உத்தியோகத்தில் அமர்ந்தேன். அலமுவும் நானும் குடித்தனம் நடத்தினோம். ஆனாலும் என் மனத்தில் சந்தோஷமில்லை. எனக்கும் சாந்தினிக்கும் ஒரு காலத்தில் உள்ள நட்பைப் பற்றி அலமு தெரிந்து கொள்ளாதபடி, சர்வ ஜாக்கிரதையாக நடந்துகொண்டு வந்தேன்.

"ஆனால் விதி குறுக்கிட்டது. திடீரென்று அலமு நோய் வாய்ப்பட்டாள். நாளுக்கு

நாள் இளைத்துக் கொண்டே வந்து படுத்த படுக்கையாகி விட்டாள். எவ்வளவோ மருந்துகள் வாங்கிக் கொடுத்தேன். ஒன்றும் பயனில்லாமல் போய்விட்டது. அலமு இவ்வுலகை விட்டு விடுதலை பெறும் தறுவாயில் என்னை அழைத்து 'நான் அதிகநாள் உயிரோடிருக்க மாட்டேன். என்னுடைய வேண்டுகோள் ஒன்றை நீங்கள் நிறைவேற்றி வைக்க வேண்டும்' என்றாள். அவள் மேலே என்ன சொல்லப் போகிறாள் என்பதை அறியாமல் 'சரி' என்றேன். 'நீங்கள் ஏற்கெனவே சாந்தினி என்ற பெண்ணிடம் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறீர்கள். அப்படியிருக்கும் போது அவளைத் திடீரென்று மறந்து என்னை நீங்கள் கல்யாணம் செய்து கொண்டது நேர்மையாகாது. நான்தான் உங்களுடன் இருந்து வாழக் கொடுத்து வைக்கவில்லை. அந்தப் பாக்கியம் சாந்தினிக்காவது கிடைக்க வேண்டுமென்பதுதான் என் பிரார்த்தனை. நான் போன பிறகு அவளுக்குக் கலியாணமாகாமலிருந்தால் அவளை என் ஸ்தானத்தில் ஏற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் என் ஆத்மா சாந்தியடையும்' என்றாள்.

“என்னுடைய ரகசியம் வெளிப்பட்டதை எண்ணித் திகிலடைந்தேன். அவள் சொல்லுவதை நான் மறுத்துச் சொல்லுமுன் அவள் தலையணைக்கு அடியிலிருந்த ஒரு காகிதக் கட்டை எடுத்து என் கையில் வைத்தாள். ஒரு கணம் என் தலை கிறுகிறுத்தது. அலமு கொடுத்த காகிதக் கட்டில் ஒரு காலத்தில் சாந்தினி எனக்கு எழுதியிருந்த கடிதங்கள்தான் இடம் பெற்றிருந்தன. நான் பதில் சொல்லுவதற்கு முன்பாக அலமு மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டாள்.



“அலமுவை நான் இழந்த அதிர்ச்சியிலிருந்து மீள ஒரு வருஷத்திற்கு மேல் ஆகிவிட்டது. பிறகு, தற்செயலாக நான் பம்பாய்க்குப் போயிருந்தபோது என்னுடைய கல்லூரித் தோழன் சௌம்யனைச் சந்தித்தேன். அவனிடமிருந்து சாந்தினிக்கு அதுவரை கலியாணமாகவில்லையென்பதை அறிந்துகொண்டு வடக்கே அவள் வேலையாயிருந்த ஊரின் பெயரையும் விலாசத்தையும் வாங்கிக் கொண்டேன். அதை யடுத்துச் சாந்தினியைச் சந்தித்தேன். கடந்த கால வரலாற்றை அவளிடம் தெரிவித்து நான் அவளைக் காண வந்த காரணத்தையும் வெளியிட்டேன். நான் கூறியதை முழுவதும் பரிவுடன் கேட்டுக்கொண்டே வந்த அவள் கடைசியாக 'நீங்கள் அலமுவின் வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காகத்தானே என்னைப் பார்க்க வந்திருக்கிறீர்கள்?' என்றாள். 'ஆமாம்' என்றேன் நான். 'உண்மையாகவே நீங்கள் அந்தக் காலத்தில் என்னைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்று நினைத்திருந்தீர்களானால் உங்கள் சித்தப்பாவிடம் தகுந்த முறையில் எடுத்துச் சொல்லிக் காரியத்தை நீங்கள் நிறைவேற்றியிருக்க வேண்டும். அதிலும் தவறி விட்டீர்கள்! அதுதான் போகட்டும். என்னை மறந்து அலமுவை மணந்தீர்கள். அதன் பிறகாவது நீங்கள் அவள் மனம் புண்படாத வகையில் உங்கள் வாழ்க்கையை நடத்தியிருக்க வேண்டும். அவள் மன அமைதி குலைந்து உயிருக்கே ஹானி வரும் வகையில் நீங்கள் நடந்துகொண்டிருக்கிறீர்கள். அவள் மன மொடிந்து சாகுந் தறுவாயில் சொன்ன புத்திமதியை நிறைவேற்றி வைப்பதற்காக என்னிடம் வந்திருக்கிறீர்கள். உங்களை நான் கலியாணம் செய்து கொள்ளுகிறேன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். நாளை எனக்கும் அலமுவுக்கு ஏற்பட்ட கதி ஏற்படாது என்று நான் எப்படி நம்ப முடியும்? சஞ்சல புத்தியும் சுயநலமும் ஒன்று சேர்ந்து உருவாகிய நீங்கள் ஆண் குலத்திற்கே ஒரு அவக்கேடு!' என்று படபடத்துப் பேசி விட்டாள் சாந்தினி. என்னுடைய தன்மானத்திற்குச் சாந்தினி கொடுத்த சவுக்கடிக்குப் பிறகு மறுமணத்தை எண்ணிப் பார்க்கக்கூட எனக்குத் துணிவு ஏற்படவில்லை. என்னுடைய வைராக்கியம் சரியானதா அல்லது தவறானதா என்று நீங்கள்தான் தீர்ப்புக் கூற வேண்டும்” என்று சொல்லி முடித்தான் ஆத்மநாதன்.

ஆத்மநாதனின் நிலைமையைக் கண்டு நான் இரங்கத்தான் வேண்டியிருந்தது. அவன் கேட்ட கேள்விக்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல், “உங்கள் வைராக்கியம் ஒருபுறம்

இருக்கட்டும். அதற்குக் காரணமான சாந்தினியின் குணத்தை நான் பாராட்ட மாட்டேன். உண்மையிலேயே அவளுக்கு உங்களிடம் அன்பு இருந்தால் என்றைக்காவது ஒருநாள் அவளுடைய கிர்த்தாட்சண்யமான போக்கிற்கு வருத்தம் தெரிவித்துத்தான் ஆகவேண்டும். அதன் பயனாக உங்கள் மனத்திலும் ஒரு மாறுதல் ஏற்படலாம். இவை இரண்டையும் தான் நான் எதிர்பார்க்கிறேன்!" என்று சொல்லி ஆத்மநாதனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு வெளியே புறப்பட்டேன். வழி நெடுக ஆத்மநாதனின் அந்தரங்க சஞ்சலம் என் மனத்தையும் வாட்டியது.

நான் என் வீட்டிற்குத் திரும்பியதும் என் மனைவி, "நான் உங்களை இந்தப் படை பதைக்கிற வெய்யிலில் மாம்பலத்துக்குப் போய் ஆத்மநாதனைப் பார்த்துவிட்டு வரும்படி சொல்லியிருக்க வேண்டாம். நீங்கள் வெளியே போன கொஞ்ச நாழிகை கழித்துச் சர்மாவும் அன்னபூரணி மாமியும் இங்கே வந்திருந்தார்கள். பெங்களூரிலிருந்து போன வாரம் பிரேமாவைப் பார்த்துவிட்டுப் போன பையனின் பெற்றோர்கள் இன்றைக்குச் சாயங்காலம் நிச்சயதாம்பூலம் வாங்கிக் கொள்ள வருவதாகத் தந்தி அனுப்பியிருக்கிறார்களாம். உங்களையும் என்னையும் நாலு மணிக்குள் அங்கே வரும்படி சொல்லியிருக்கிறார்கள். நான் முன்னால் போகிறேன். நீங்களும் சீக்கிரம் வந்துவிடுங்கள்" என்று கூறிவிட்டுச் சர்மாவின் வீட்டிற்குப் புறப்பட்டாள்.

வெளியில் போய்விட்டு வந்த அலுப்புத் தீரும் வரை கூடத்தில் இருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம் "ஸார்" என்று அழைத்த வண்ணம் ஆத்மநாதன் உள்ளே நுழைந்தான். அவன் முகத்தில் ஒரு பரபரப்புத் தென்பட்டது. என்னைக் கண்டதும் அவன் ஒரு கடிதத்தை நீட்டி, "நீங்கள் என்னைப் பார்த்துவிட்டுக் கிளம்பியதும் இன்றையத் தபாலில் இந்தக் கடிதம் வந்தது; இதைச் சாந்தினிதான் எழுதியிருக்கிறாள். தயவு செய்து வாசித்துப் பாருங்கள்!" என்றான்.

அதை வாசித்துப் பார்த்தேன். அதில் சாந்தினி, தான் ஏதோ ஆத்திர புத்தியால் இரண்டு வருஷத்திற்கு முன் ஆத்மநாதனின் மனம் நோகும் வண்ணம் நடந்து கொண்டதற்குத் தன்னை மன்னிக்கும்படியும், தன்னை அவனுடைய வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்ளும்படியும் பணிவுடன் கேட்டுக் கொண்டிருந்தாள். கடிதத்தில் தொனித்த பரிவும், அடக்கமும் சாந்தினியைப் பற்றி நான் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்ற ஏதுவாயிருந்தன.

"சென்றதை மறந்து நீங்கள் சாந்தினியை ஏற்றுக் கொள்ளுவதுதான் சரி என்று என் மனத்துக்குப் படுகிறது" என்றேன் நான் ஆத்மநாதனிடம். "உங்களுடைய யோசனை அதுவானால் அதன்படியே நான் செய்யச் சித்தமாயிருக்கிறேன். இன்றைக்கே கடிதம் எழுதிப் போட்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான் ஆத்மநாதன். அதுவரை காணாத ஒரு உள்ளத் தெளிவு அவன் முகத்தில் பிரதிபலித்ததைக் கண்டு எனக்கு எவ்வளவோ திருப்தியாயிருந்தது.

ஆத்மநாதன் சென்றபின் சர்மாவின் வீட்டிற்குக் கிளம்பினேன். நான் அங்கே போனபோது பிரேமாவின் விவாக நிச்சயதார்த்தம் நடந்துகொண்டிருந்தது. அது முடிந்த பின் நானும் என் மனைவியும் வீடு திரும்பினோம்.

வழியில், "ஆத்மநாதனின் மறு கலியாணமும் நிச்சயமாகிவிட்டது. இரண்டு வருஷத்திற்கு முன்பே நடந்திருக்க வேண்டியது இப்பொழுதுதான் நடக்கும் போலிருக்கிறது. நடுவில் ஏற்பட்ட சிக்கலைத் தீர்த்து வைக்க என்னுடைய முயற்சியும் தேவையாயிருந்தது. எப்படி என்று மட்டும் கேட்டுவிடாதே" என்றேன் என் மனைவியிடம்.

என் விருப்பத்திற்கிணங்கி என் மனைவி மறு கேள்வி போடவில்லை. அதே காரணத்தால் ஆத்மநாதனின் அந்தரங்கம் பலநாள் வரை நான் பாதுகாத்து வந்த ரகசியங்களில் ஒன்றாக என் நினைவில் நிலவியது.



## இந்தியாவின் **கிராம**

## புனருத்தாரண திட்டங்களுக்கு




**தி அஸோஸியேடட் சிமெண்டு கம்பெனீஸ் லிமிடட்**

**தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடட்**

# முயல் குட்டியின் பிரயாணம்

பி.எஸ். மணி

கோடை விடுமுறைக்குத் தன் தாத்தாவின் வீட்டுக்கு வந்திருந்த முயல் குட்டி லீவு கழிந்ததும் தன் ஊருக்குப் புறப்பட்டது. தாத்தா முயல் தன் பேரனிடம், "நேராக ஊருக்குப் போய்ச் சேர். வழியில் ஏதாவது துஷ்ட மிருகங்களினால் ஆபத்து நேரிடலாம். ஜாக்கிரதையாகப் போ!" என்று எச்சரித்தது. "ஆகட்டும்" என்று தலையசைத்து விட்டுக் குதித்துக் கொம்மாள மடித்துக்கொண்டே சென்றது முயல் குட்டி. தனியாகச் சுதந்திரத்துடன் ஊருக்குப் போக வாய்ப்புக் கிடைத்ததே என்பதில் அதற்குப் பேரானந்தம்!

காட்டின் அற்புதக் காட்சிகளையெல்லாம் கண்டு அதிசயித்தவாறே போய்க் கொண்டிருந்தது முயல் குட்டி. தாத்தாவின் ஊரிலிருந்து பாதி தூரம் வந்திருக்கும். உச்சிவேளை வந்து சூரியன் தலைக்கு நேராக வந்து விட்டான். குட்டி முயலுக்கு ஒரே அலுப்பு. கால்களும் நன்றாக வலிக்க ஆரம்பித்து விட்டன. என்ன செய்யும்? உடனே ஒரு மரத்தடியில் போய் அலுப்புடன் உட்கார்ந்தது. அதற்குத் தூக்கம் கண்ணைச் சுற்றியது. மறு நிமிஷம் முயல் அலுப்பினால் கண்ணயர்ந்து விட்டது.

அது தூக்கத்திலிருந்து கண் விழித்தபோது வெகு நேரமாகி விட்டது. "ஐயோ! அதிக நேரம் தூங்கிவிட்டேனே! இருட்டில் வழி தெரியாதே! என்ன செய்வேன்?" என்று பயத்தினால் பலமாகவே கத்தி விட்டது.

"கவலைப்படாதே! நீ வழி தெரியாமல் திண்டாட வேண்டாம்! நான் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்" என்று தன் கட்டைக் குரலில் கூறிக் கொண்டே அந்தக் குட்டி முயலின் முன் திடீரென்று வந்து குதித்தது ஒரு கரடி. அந்தப் பயங்கர மிருகத்தைக் கண்டு திடுக்கிட்டு முயல் குட்டி எதிர்ப் பக்கம் திரும்பி ஓட முயற்சி செய்தது. ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! "அட! மெதுவாக எங்களிடமிருந்து தப்பி



ஓடப் பார்க்கிறாயா? எங்கள் வலையிலிருந்து நீ மீள முடியாது" என்று கத்தியபடி எதிர்த் திசையில் வந்து நின்றது ஒரு ஓநாய்.

அந்த இரண்டு பயங்கர அசுரர்களிடமிருந்து எப்படித் தப்புவது என்று தெரியாமல் திகைத்து நின்றது முயல் குட்டி. அதற்குள் கரடியும் ஓநாயும் குட்டி முயலைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டன. அவ்விரண்டு மிருகங்களும் முயல் குட்டியைக் கரகரவென்று இழுத்துக் கொண்டே சென்றன.

"இதோ பார்! நான்தான் முதலில் இந்த முயலைப் பார்த்தேன். ஆகையால் இதை நான்தான் என் மனைவியிடம் கொடுத்துச் சமைக்கச் சொல்லப் போகிறேன்" என்றது கரடி.

"இந்த முயலை எனக்குத் தந்துவிடு. என் வீட்டில் ஒரு பெரிய ஜாடி நிறையத் தேன் வைத்திருக்கிறேன். அதை உனக்குத் தருகிறேன்" என்று கூறியது ஓநாய்.

"என்னை விட்டு விடுங்கள். நான் உங்களுக்கு என்ன தீங்கு செய்தேன்? என்னை எங்கே இழுத்துச் செல்கிறீர்கள்?" என்று கண்களில் நீர் மல்கக் கேட்டது முயல்குட்டி. ஆனால் அவைகள் அதற்குக் கொஞ்சமாவது காது கொடுத்தால் தானே?

ஓநாயின் வீடு வந்தது. அந்த வீட்டினுள் கரடியும், ஓநாயும் முயலை இழுத்துச் சென்றன. ஒரு நாற்காலியில் அந்த முயலை உட்கார வைத்துக் கயிற்றினால் கட்டின. முயல் 'ஹோ' வென்று கதறி யழுதது.

பிறகு ஒன்றுக்கொன்று யார் அந்த முயல் குட்டியை அடைவது என்பதைக் குறித்துச் சண்டை யிட்டன. ஓநாய் தன் வீட்டிலிருந்த தேன் ஜாடியைக் கரடிமுன் கொண்டு வைத்து, "இந்தா! உன் மனைவிக்குத் தேன் என்றால் உயிர் என்றாயே! இதை உன் மனைவிக்கு எடுத்துச் செல். நான் முயலை எடுத்துக் கொள்கிறேன்" என்று கூறியது.

"ஆனால் நான் எப்படி முடிவு சொல்ல முடியும்? என் மனைவிக்குத் தேனில் அதிகப் பிரியமா, முயல் குட்டியைச் சாப்பிடுவதில் அதிகப் பிடித்தமா என்று எனக்குத் தெரியாதே?" என்றது கரடி.

"அப்படியானால் உன் மனைவியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு வாயேன்" என்று ஓநாய் ஆலோசனை கூறியது.

"ஆனால் நான் வருவதற்குள் நீ முயலைச் சாப்பிட்டு விடுவாயே ..."

"அதற்காகக் கவலைப் படாதே! நான் என் வீட்டைப் பூட்டிச் சாவியை உன்னிடம் தந்து விடுகிறேன். நீ உன் வீட்டுக்குப் போய்க் கேட்டுக் கொண்டு வா!"

"ஆகட்டும்" என்று கூறிக் கரடி அந்த வீட்டைப் பூட்டிச் சாவியை ஓநாயிடமிருந்து வாங்கிக் கொண்டு தன் வீட்டை நோக்கி ஓடியது. ஓநாய் வாசல் புறம் காவலாக நின்றது.



**வீ**ட்டினுள் இருந்த முயல் குட்டி 'வீல்' என்று கதறிக்கொண்டே நாற்காலியிலிருந்து விடுவித்துக்கொள்ள முயற்சி செய்தது. அது பலமாக நாற்காலியை இப்படியும் அப்படியும் அசைத்தது. அவ்வளவுதான்; நாற்காலி தொபுகடீரென்று குடை சாய்ந்து விழுந்து விட்டது. இரண்டு, மூன்று தரம் நாற்காலி உருண்டது. நாற்காலியோடு குட்டி முயலும் "ஐயோ! செத்தேன்" என்று அலறியபடி உருண்டு புரண்டது. நாற்காலி உருண்டதில் முயலின்மேல் கட்டியிருந்த கயிறு அறுந்து விட்டது. முயல் அந்தக் கட்டுகளிலிருந்து விடுதலை யடைந்தது.

ஏதோ பலத்த சத்தம் வீட்டினுள் கேட்பதை யறிந்து ஓநாய் வீட்டின் பின்பக்க ஜன்னலின் வழியாக உள்ளே என்ன நடக்கிறது என்று பார்த்துத் தெரிந்து கொள்ளுவதற்காகச் சென்றது.

கரடி சாவியுடன் அடிக்கடி ஓநாயின் வீட்டைச் சந்தேகத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றது. கொஞ்ச தூரம் போய்க் கரடி திரும்பிப் பார்த்த பொழுது வாசலில் காவல் நின்ற ஓநாயைக் காணோம். 'அடடா! ஓநாய் பேச்சை நம்பி மோசம் போய் விட்டேனே! என்னை மெதுவாகத் துரத்தி விட்டு வீட்டின் பின்பக்கமாக நுழைந்து நமக்கு முன்னால் முயலைச் சாப்பிட்டிருக்குமோ? சரி! ஏமாந்துவிடக் கூடாது' என்று எண்ணித் திரும்பி ஓநாயின் வீட்டை நோக்கி ஓடி வந்தது கரடி.

வாசலில் ஓநாய் இல்லாதது அதன் சந்தேகத்தை இன்னும் தூண்டி விட்டது. தடதடவென்று ஓடி வந்து, "ஏ, ஓநாயே! என்னை ஏமாற்றி விட்டு முயலைச் சாப்பிடலாம் என்று பார்த்தாயா? அது என்னிடம் பலிக்காது" என்று உரக்கக் கூவிக்கொண்டே கதவைக் கோபத்துடன் படாரென்று திறந்து கொண்டே உள்ளே நுழைந்தது.

கரடியின் பலத்த சத்தத்தைக் கேட்டு முயல் கவரோரமாக ஒளிந்து நின்றது. கதவைத் திறந்து கரடி தடதடவென்று உள்ளே நுழைந்ததுதான் தாமதம், முயல்குட்டி நாலுகால் பாய்ச்சலில் வெளியே பாய்ந்து விட்டது.

வாசல் பக்கம் கதவு திறக்கும் சத்தம் கேட்டு ஓநாய் பின்னாலிருந்து ஓடி வந்து, உள்ளே முயலைக் காணாமல் கோபத்துடன் திரும்பிய கரடியுடன் நன்றாக மோதிக் கொண்டது.

அந்த இரு பயங்கர மிருகங்களிடமிருந்தும் தப்பிய முயல், தூரத்தில் தலை தெறிக்க வீட்டை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது.




## 19. வேதா புறப்பட்டாள்!

டாக்டரின் மனத்திலே சிந்தனைப் போர் மூண்டது. 'சிவப்பிரகாசத்தைப் போன்ற இருதயமற்ற மனிதர்களுக்கு இத்தகைய கதிதான் நேரிடும். சிவப்பிரகாசத்தைப் போன்ற கொடிய சித்தமுள்ளவர்கள் இருப்பதைவிட இப்படி இறந்து விடுவது எவ்வளவோ மேலானதுதான். இது மரகதத்தின் குற்றமாகாது. அவள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், தான் வளர்த்த ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் காப்பாற்றவும் இந்தக் கொடிய கொலைக் குற்றத்தையும் செய்வதற்குத் துணிந்து விட்டாள். சிவப்பிரகாசம் தன்னுடைய கணவனாகவே இருந்தாலும் அவர் செய்த கொடூரச் செயல்களைத் தாங்க மாட்டாமல் பழிக்குப் பழி தீர்த்துக் கொண்டாள். இதில் என்ன தவறு!' என்று ஒரு சமயம் எண்ணுவார். இன்னொரு சமயம் 'என்ன இருந்தாலும் மரகதம் கொலைக் குற்றம் செய்தவள். அவளைப் பிடித்துக் கொடுத்துத் தண்டனை வாங்கிக் கொடுக்க வேண்டியதுதான் நியாயம்!' என்ற எண்ணம் எழும். இப்படியாக அவர் சிந்தனையில் தடுமாறிக் கொண்டிருந்தபொழுது, "உங்களுக்கு என்ன தயக்கம் இதில்! உங்கள் கடமை என்னவென்று உங்களுக்குத் தெரியாதா......!" என்று மரகதம் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டே கேட்டாள்.

"என் கடமை எதுவென்று எனக்குத் தெரியும். ஆனால் அதை நான் செய்ய முடியாத நிலையில் இருக்கிறேன். உங்களை ஆபத்தில் சிக்க வைப்பதற்கு நான் சிறிதும் இஷ்டப்படவில்லை" என்றார் டாக்டர் தயங்கியபடியே.

மரகதத்தின் முகத்தில் பரிகாசமும் வெறுப்பும் கலந்த சிரிப்பொன்று நெளிந்தது. "எனக்கு ஆபத்தா! என்னை ஆபத்திலிருந்து காப்பாற்றுவதில் உங்களுக்கு என்ன லாபம்!" என்றாள்.

டாக்டர் சிறிது நேரம் யோசித்தார். "நீங்கள் செய்த காரியம் மிகவும் சரியானதாக எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் வேதாவிற்காக உங்கள் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணித்திருக்கிறீர்கள். அவளுக்காக உங்கள் உயிரைக்கூடக் கொடுக்கச் சித்தமாய் இருக்கிறீர்கள். அவளை இங்கிருந்து அழைத்துக் கொண்டுபோய் அவள் வாழ்வையே குலைக்க நினைத்த ஒரு மனிதனோடு போராடி அவனையே கொன்று விட்டீர்கள்" என்று சொல்லி நிறுத்தினார் டாக்டர்.

"ஆமாம்! அது உண்மை. அதை நான் மறுக்க முடியாது. ஆனால்......" என்று சொல்லிவிட்டுப் பொன்னியைப் பார்த்து, "பொன்னி! நீ கொஞ்சம் வெளியே போ. நான் டாக்டருடன் தனியாகச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன்" என்றாள் மரகதம்.

"சரி அம்மா!" என்று சொல்லி விட்டுப் பொன்னி வெளியே சென்றாள்.

அவள் வெளியே சென்றதும் மரகதம் டாக்டரைப் பார்த்து, 'டாக்டர்! நான் வேதாவை விட்டுப் பிரியப் போகிறேன் என்பது நிச்சயம். அவளை ஒரு சரியான மனிதரிடம் ஒப்படைப்பது தான் இனிமேல் எனக்குள்ள ஒரே ஒரு கடமை. அதற்கு உங்களைத் தவிர வேறொரு மனிதரும் எனக்குப் புலனாகவில்லை" என்றாள்.

டாக்டர் பரசுராமன் மௌனமாக நின்று கொண்டிருந்தார். அவர் மரகதத்திடமிருந்து இத்தகைய வார்த்தைகளை இவ்வளவு சீக்கிரம் எதிர்பார்க்கவேயில்லை.

"என்னுடைய தங்கை சாரதா இறந்து போன அன்று இரவு உங்களைப் பற்றித் தவறாக என் மனது எண்ணியது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இப்பொழுது உங்களை நான் கௌரவமும் கண்யமும் நிறைந்த நல்ல மனிதராக நினைக்கிறேன்" என்றாள் பரசுராமனின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே.

"என்னை நீங்கள் இப்பொழுதாவது நல்ல மனிதனாக நினைத்தவரையில் மிக்க சந்தோஷம்" என்றார் டாக்டர் பரசுராமன்.

"அன்று இரவு வேதாவிடம் மிகப் பரிவாகப் பேசினீர்கள். அந்த அன்பும் பரிவும் அவளிடம் உங்களுக்கு இன்னும் இருக்கிறதல்லவா!" என்று கேட்டாள் மரகதம்.

"உங்களுக்குத்தான் அது நன்றாகத் தெரியுமே! வேதாவிடம் எனக்கு அளவற்ற காதலும் அன்பும் இப்பொழுதும் இருக்கிறது. அவளுக்காக இந்த உலகில் நான் செய்யக் கூடாத காரியம் எதுவுமே இல்லை" என்றார் டாக்டர் உணர்ச்சிப் பரவசத்தோடு.

மரகதம் வியப்போடு அவரைப் பார்த்தாள். பிறகு "நீங்கள் ஒரு தடவைதானே அவளைப் பார்த்திருக்கிறீர்கள்!" என்று கேட்டாள்.

"இல்லை. அவளை நான் இன்னொரு தடவையும் சந்தித்திருக்கிறேன். ஒருநாள் இரவு குருவிக் குளத்தில் பொன்னியின் வீட்டில் அவளைச் சந்தித்தேன். அவளோடு மனம் விட்டும் பேசி இருக்கிறேன். அவளுக்கு என்மீது எத்தகைய அன்பு இருக்கிறதென்பதையும் பூரணமாகத் தெரிந்து கொண்டேன். இப்பொழுது உங்களிடம் எதையும் நான் மறைத்துப் பேசத் தயாராய் இல்லை.

நான் இந்த வீட்டிற்கு வந்து அவனைச் சந்திப்பதை நீங்கள் விரும்பவில்லை. நான் இப்படி உங்களுக்குத் தெரியாமல் தகாத முறையில் அவனைச் சந்தித்தது என் மனதிற்கே இழிவாகத்தான் பட்டது. ஆனால் எனக்கு அதைத் தவிர வேறு மார்க்கமே புலப்படவில்லை. பொன்னி இதற்கு உடந்தையாக இருந்து உதவி செய்தாள்'' என்றார் டாக்டர்.

மரகதம் சிறிது நேரம் மௌனமாக இருந்து ஒரு பெருமூச்சு விட்டாள். ஆனால் அவள் முகக் குறியில் எவ்வித மாறுதலும் இல்லை. ''அப்படி என்றால் வேதாவும் உங்களைப் பூரணமாக விரும்புகிறாள் அல்லவா!'' என்று கேட்டாள்.

''ஆமாம். அதில் சிறிதும் சந்தேகமே இல்லை'' என்றார் டாக்டர்.

மரகதம் மறுபடியும் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, ''இதை யெல்லாம் முன்னால் நான் கேள்விப்பட்டிருந்தால் நான் வேறுவிதமாகத்தான் நடந்து கொண்டிருப்பேன். ஆனால் இப்பொழுது என் சித்தமே மாறி விட்டது. இனிமேல் உங்களுடைய பாதுகாப்பில் வேதாவை விட்டுச் செல்வதாகவே முடிவு செய்து விட்டேன். எனக்காகவும் இறந்து போன அவளுடைய தாயாருக்காகவும் அவளை அன்போடு நடத்திக் காப்பாற்ற வேண்டியது உங்கள் கடமை'' என்றாள். அப்பொழுது அவள் உடல் முழுவதும் நடுங்கியது. அவளுடைய குரலில் உணர்ச்சியும் ஆதங்கமும் தொனித்தன.

''அவளை நான் என் உயிருக்குயிராகக் காப்பாற்றுகிறேன். நீங்கள் சிறிதும் கவலைப்படாதீர்கள்'' என்றார் டாக்டர்.

சிறிது நேரம் வரையில் பிரமை பிடித்தவள் போல் டாக்டரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் மரகதம். வெளுத்திருந்த அவளுடைய அந்தச் சோக முகத்திலும்கூட ஒரு திருப்தியும் சந்தோஷமும் நிலவியது. ''நீங்கள் இப்பொழுதே வேதாவை அழைத்துக் கொண்டு போய் விடுங்கள். அவளிடம் இங்கு நடந்த கலவரத்தை யெல்லாம் அப்படியே சொல்லி விடாதீர்கள். ஒரு வேளை பொன்னி அவளிடம் ஏதாவது சொல்லி இருக்கலாம்'' என்றாள்.

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். பொன்னி வேதாவின் இருதயம் வாட்டமடையும்படி எதுவும் சொல்லி இருக்க மாட்டாள். அதிருக்கட்டும், நீங்கள் உங்களைப் பொறுத்த வரையில் என்ன செய்யப் போகிறீர்கள்!'' என்று பதட்டத்துடன் கேட்டார் டாக்டர்.

''நானா! போலீஸ்காரர்கள் என்னைத் தேடிக் கொண்டு வர மாட்டார்களா! அது வரையில் இந்தக் கட்டிடத்திலேயேதான் இருப்பேன். நீங்கள் நந்தி துர்க்கம் போனவுடனே போலீஸ்காரர்களுக்குத் தகவல் கொடுத்து விடுங்கள்'' என்றாள் மரகதம்.

''வேண்டாம், அது வேண்டாம். இதிலிருந்து தப்பித்துக் கொள்ள வேறு வழிகள் இல்லையா...!'' என்றார் டாக்டர்.

''வேறு வழி இல்லை. ஏதேனும் இருந்தாலும் அது எனக்குப் பிடிக்காது. நான்தான் அவரைக் கொன்றேன் என்பதைப் போலீசாரிடம் மறைக்க முடியாது. என்னுடைய குற்றத்திற் கேற்ற தண்டனை எதுவாயிருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ள நான் தயார். அதனால் ஒன்றும் பாதகமில்லை. முதலில் வேதாவைப் பற்றிய கவலைதான் எனக்கு. தயவு செய்து என்னோடு வாருங்கள்'' என்று சொல்லி விட்டு அந்த அறையை விட்டு வெளியே வந்தாள் மரகதம்.



டாக்டர் பரசுராமன் அவளைப் பின் தொடர்ந்தார். அப்பொழுது அவளுடைய வார்த்தைகளுக்கு அவர் கட்டுப்படத்தான் வேண்டியிருந்தது. அவர் எதையும் சொல்லக் கூடிய நிலையில் இல்லை.

மரகதம் நேராக வேதாவின் அறைக்குச் சென்றாள். வேதாவின் அறையில் விளக்குப் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. கட்டிலில் அமர்ந்திருந்த வேதாவுக்குச் சமீபமாக பொன்னி உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். மரகதத்தையும் டாக்டரையும் பார்த்ததும் வேதா திகைப்படைந்து எழுந்து நின்றாள். பொன்னி வேதாவிடம் அவளுடைய தகப்பனார் இறந்து விட்டதைச் சொல்லி இருக்க மாட்டாள் என்பதை வேதாவின் முகக் குறியிலிருந்து மரகதம் உணர்ந்து கொண்டாள். பொன்னி வேதாவிடம் உண்மையைச் சொல்லி யிருந்தால் வேதாவின் முகம் அவ்வளவு அறியாமை நிறைந்ததாக இருக்காது.

''வேதா! உடனே எழுந்திரு. வேறு புடவை உடுத்திக் கொள். நானும் பொன்னியும் உன்னுடைய சாமான்களை யெல்லாம் எடுத்துக் கட்டி வைக்கிறோம். நீ டாக்டருடன் நந்தி துர்க்கம் போக வேண்டும்'' என்றாள் மரகதம்.

''நானா! டாக்டரோடு போக வேண்டுமா!'' என்று கேட்டுவிட்டு மரகதத்திற்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த டாக்டரின் முகத்தை ஆச்சரியத்தோடு பார்த்தாள் வேதா. கண நேரத்தில் வெட்கத்தினால் அவள் முகம் சிவந்தது. அவள் தலை குனிந்த வண்ணம் தடுமாறும் குரலில், ''அப்பா என்னை எங்கோ அழைத்துப் போகப் போவதாகச் சொன்னாரே!'' என்றாள்.

''இல்லை, நீ உன் தகப்பனாரோடு போகப்போவதில்லை. டாக்டரோடுதான் போக வேண்டும்.



அதைப் பற்றி டாக்டர் உனக்கு அப்புறம் சொல்லுவார்!" என்றாள் மரகதம்.

வேதா மறுபடியும் தலை நிமிர்த்து டாக்டரைப் பார்த்தாள். அப்பார்வையிலேயே அவளுக்குள்ள ஆனந்தமும் நிம்மதியும் நன்கு விளங்கின.

மரகதமும் பொன்னியும் வேதாவின் உடைகளையெல்லாவற்றையும் தேடி எடுத்து மூட்டை கட்டலானார்கள்.

டாக்டரின் மனத்தில் வேலைக்காரி செங்கமாவின் நினைவு வரவே, சட்டென்று சமையலறைக்குள் வந்தார். ஆனால் அங்கு செங்கமாவைக் காணோம். அவள் எங்கோ தப்பி ஓடிவிட்டாள் என்று அவருக்குத் தெளிவாக விளங்கியது.

அவர் தாழ்வாரத்திலிருந்த நாற்காலியில் அமர்ந்து ஆழ்ந்து யோசிக்கலானார். சிவப்பிரகாசம் இறந்துவிட்டார். அவர் இறப்பதற்கு காரணமாக இருந்த மரகதம், தானே போலீசாரிடம் குற்றத்தை ஒப்புக் கொள்ளப் போவதாகச் சொல்லுகிறாள். வேதாவின் வாழ்க்கை அவருடைய கையில் இப்பொழுது ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. இதையெல்லாம் நினைக்க நினைக்க டாக்டருக்கே விநோதமாக இருந்தது. அன்று இரவு அப்படியெல்லாம் நடக்கப் போகிறதென்று அவர் எதிர்பார்த்தாரா! அவருக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தோடு எல்லாவற்றையும் சிந்தனை செய்ய வேண்டியும் இருந்தது. அவர் சிந்தனை செய்து கொண்டிருக்கும் சமயத்தில் மரகதம் வேதாவையும் பொன்னியையும் அழைத்துக் கொண்டு அங்கு வந்தாள். பொன்னி ஒரு பெரிய பெட்டியைக் கொண்டு வந்து அங்கு வைத்தாள். வேதாவின் கையில் ஒரு சிறிய துணி மூட்டை இருந்தது. வேதா அழகான நீல நிறப் பட்டாடை உடுத்தியிருந்தாள். இவ்வளவு நாளும் காணப்படாத சில ஆபரணங்கள் அவள் தேகத்தில் மின்னி அவளுடைய அழகைச் சிரேஷ்டமாக்கின. அவள் டாக்டரோடு புறப்படுவதற்குத் தயாராகிவிட்டவள்போல் துடிப்போடு காணப்பட்டாள். அவளுடைய அழகிய விழிகளில் உவகையும் புதுமை ஒளியும் பிரகாசித்தன. வெட்கத்தோடு கூடிய புன்முறுவல் அவள் உள்ளத்து உவகைப் பெருக்கை எடுத்துக் காட்டியது. வேதாவைப் பார்த்த டாக்டரின் விழிகள் அங்கேயே நிலைத்து விட்டன. வேதாவின் அழகில் அவர் கட்டுண்டு இருந்தார் என்பது உண்மையே. ஆனால் இன்று அவளிடம் தோன்றிய புது அழகு அவரைத் திக்பிரமை பிடித்துத் திகைக்க வைத்துவிட்டது என்றே சொல்ல வேண்டும்.

மரகதம் வேதாவை நெருங்கி அவளை அணைத்துக் கொண்டு, "வேதா! நீ எப்படியாவது டாக்டரைக் கல்யாணம் செய்துகொண்டு சுகமாய் இரு. இது தான் நான் செய்யும் பிரார்த்தனை. டாக்டர் உனக்கு எல்லாவற்றையும் சொல்லுவார். கவலைப் படாதே! ஆனால் இதை மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக் கொள். நான் உன்னிடம் கோபமாக நடந்து கொண்டிருக்கிறேன். கண்டிப்பாக நடந்து கொண்டிருக்கிறேன். இதெல்லாம் என் மனதிற்குச் சரியென்று பட்டதால்தான் அப்படியெல்லாம் நடந்து கொண்டேன். நான் எப்படி உன்னிடம் நடந்து கொண்டிருந்தாலும் அது உன்னுடைய நன்மைக்காகவும், இறந்துபோன உன் தாயாரின்மீது எனக்குள்ள அபிமானத்தினாலும் தான் அப்படி நடந்து கொண்டேன் என்று நம்பு" என்றாள். அவளுடைய குரல் துயரத்தினால் தழுதழுத்தது. அவளுடைய கண்கள் கலங்கின; பிறகு முத்து முத்தாகக் கண்ணீர் வழிந்தது.

வேதா சிறு குழந்தைபோல் மரகதத்தின் அணைப்பில் இருந்தாள் மரகதத்திற்குத் தன்னிடமுள்ள பூரணமான அன்பையும் அப்பொழுதுதான் அவள் உணர்ந்து கொண்டாள்.

சிறு குழந்தையின் மழலைச் சொல் போன்ற குரலில், "பெரியம்மா! மறுபடியும் உன்னை நான் பார்க்க முடியுமா! எப்பொழுது!" என்று கேட்டாள் வேதா.

"என்னையா......! மறுபடியும் ஏன் பார்க்க வேண்டும்! தெய்வ அனுக்கிரகம் இருந்தால் பார்க்கலாம். ஆனால் நான் ரொம்ப நாள் உயிரோடு இருக்க முடியாது" என்றாள் மரகதம் வேறு எங்கோ தன் பார்வையைச் செலுத்திய வண்ணம். சிறிதுநேரம் அந்த அறையில் மௌனம் சூழ்ந்திருந்தது. "சரி! நாழிகையாகி விட்டது. டாக்டர் காத்திருக்கிறார். புறப்படு" என்றாள் மரகதம். வேதா மரகதத்தை நமஸ்காரம் செய்து விடைபெற்றுக் கொண்டாள். பொன்னி பெட்டியை எடுத்துக் கொண்டாள். டாக்டர் தன் தோல் பெட்டியை எடுத்துக்கொண்டு மரகதத்தைப் பார்த்து, 'போய் வருகிறேன்' என்பதுபோல் தலையை ஆட்டினார்.

மரகதம் தடுமாறும் குரலில், "டாக்டர் உங்களை நம்பி என் குழந்தையை ஒப்படைத்திருக்கிறேன். அவளுக்கு எவ்விதக் குறையுமில்லாமல் காப்பாற்றுங்கள். அவளுக்காக என்னால் கொடுக்க முடிந்தது எங்களுடைய நகைகள்தான்" என்றாள்.

டாக்டர், "வேதாவைப் பற்றி நீங்கள் கவலைப் படவேண்டாம். நான் வேதாவை மிகவும் அன்பாகவே நடத்துவேன். ஆனால் உங்களைப்பற்றித் தான் எனக்கு மிகக் கவலையாய் இருக்கிறது. நீங்கள் எப்படி..." என்றார்.

"அதைப்பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள்' என்னைப் பற்றிய முடிவை நானே செய்து கொள்கிறேன்" என்றாள் மரகதம்.

டாக்டர் அவளிடம் விடைபெற்றுக் கொண்டு வேதாவையும் பொன்னியையும் அழைத்துக் கொண்டு கிளம்பினார். அவர் அந்தக் கட்டிடத்திலிருந்து வெளியே வந்தபொழுது நீல்வானில் இருள் பிரிந்து கொண்டிருந்தது. பொழுது விடிந்து விட்டதற்கு அடையாளமாக வானில் சுக்ரோதயமாகித் தனி வைரம் பதித்ததுபோல் சுடர்விட்டுப் பிரகாசித்தது. (தொடரும்)



# ஜிம்மி!

கமலாவும் ஜிம்மியும் பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். கமலா பந்தை எறிவாள். ஜிம்மி ஓடிப்போய் அதை எடுத்துக் கொண்டு வரும். இந்த விளையாட்டை ஒரு மீசைக்காரர் பார்த்தார். தாமும் அந்தப் பந்து விளையாட்டில் கலந்து கொள்ள விரும்பினார். கமலா எறிந்த பந்தைப் பக்கத்திலிருந்த குளத்தில் விழும்படி உதைத்தார். ஜிம்மி குளத்தில் குதித்து நீந்திப் பந்தை வாயில் கவ்வி எடுத்து வந்தது. அதற்கு ரொம்பக் கோபம். மீசைக்காரருக்குப் பாடம் கற்பிக்க நினைத்தது.





அவர் உதைத்ததில் ஒழிந்துவிட்ட பந்துக்குள் ஜலம் நிரம்பியிருந்தது. மீசைக்காரரின் முகத்தை நோக்கி ஜிம்மி பந்தை அழுத்தியது. ஜலம் பீறிட்டு அவர் முகத்தில் அடித்தது. கோபங் கொண்ட அவர் பந்தைப் பிடுங்கி மீண்டும் உதைத்தார். பந்து ஒரு வழிப்போக்கர் முகத்தில் விழுந்து, அவர் மூக்குக் கண்ணாடி தூள் தூளாக நொறுங்கியது. உடனே கோபங் கொண்ட அவர் மீசைக்காரரை அடிக்க ஆரம்பித்து விட்டார். இதைப் பார்த்த கமலாவுக்கும் ஜிம்மிக்கும் ஆனந்தம் தாங்கவில்லை. பந்து ஆடுவதைவிட இன்றைய தினம் இந்த விளையாட்டு பிரமாதமாயிருந்தது. சந்தோஷத்துடன் சிரித்துக் கொண்டே ஓடி விட்டார்கள்.





**கோலினஸ்**
**புன்னகையில் அழகு மிளிர்கிறது !**

'கோலினஸ்' வேறெந்த டென்டல் க்ரீமையும் விட எவ்வளவோ அதிக சிக்கனம் வாய்ந்தது— ஏனெனில், ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது.

நுரைதான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம் !




இந்தியாவில் தயாரிப்பாளர்கள் :

ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய் 1

கிளைகள் : கல்கத்தா - மதராஸ் - டில்லி




எஸ். பி. ஹர்ஷன்

**ப**டுக்கையில் புரண்டு படுத்தாள் சீதா. அவள் வாய் மெல்ல, "மாமீ, பாலுவுக்குக் கொஞ்சம் காப்பி கலந்து கொடுக்கிறீர்களா? அவன் பள்ளிக்கூடத்திலிருந்து வரும் நேரம் ஆகிவிட்டது. எனக்கோ தூக்கம் வரும் போலிருக்கிறது. வந்ததும் வராததுமாகக் காப்பி இல்லாவிட்டால் அவன் ஆட்டி அடிப்பானே!'' என்று முணுமுணுத்தது.

அவள் அருகில் நின்று கொண்டிருந்த செல்லம் மெள்ளச் சிரித்தாள். "என் கையால் காப்பி கலக்கலாமோ, மாமி? தைரியமாக என்னிடம் இதைச் சொல்லுகிறீர்களே! நான் ஏதாவது சொக்குப் பொடி போட்டு உங்கள் பிள்ளையை மயக்கி விட்டால் என்ன எனக்குத் தெரியாதா?'' என்று சொல்லிக் கொண்டே அவள், பதிலுக்குக் காத்திராமல் காப்பி போடும் நோக்கத்துடன் சமையலறையை நோக்கி நடந்தாள்.

கும்மட்டியைப் பற்ற வைத்துக் கொண்டே அவள் தன் நினைவைப் பின்னோக்கி ஓட விட்டாள். மனவேகத்தைக் காலவேகத்தோடு ஏதாவது விகிதப் பொருத்தம் போட்டுச் சொல்லிவிட முடியுமா என்ன?

★

**மு**தல் முதலில் தனக்கென்று ஒரு பெரிய

தான் அரிது. எதற்கும் தெய்வம் அவர்களைக் கண் திறந்து பார்க்க வேண்டாமா? மனம் விரக்தியுற்ற நிலையில் தான் செல்லம் தன் சொந்தக் குழந்தையைச் சீராட்ட விட்டாலும் ஊரார் குழந்தையைச் சீராட்டும் பாக்கியமாவது தனக்குக் கிடைக்கட்டுமே என்று எண்ணித் தன் வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விடுவதற்கு முன்வந்தாள்.

எந்த நோக்கத்தோடு அவள் இதற்குத் துணிந்தாளோ அந்த நோக்கம் அவள் வரை நிறைவேறிவிட்டது. ஏனெனில் இயற்கையாகவே நோயாளியான சீதாவிடம் கிடைக்காத சலுகைகள் செல்லத்தின் மூலம் பாலுவுக்குக் கிடைத்தன. ஆகவே, சொந்தத் தாயைவிட அவன் செல்லம் மாமியிடம் அதிகமாகப் பழக ஆரம்பித்தான்.

குளித்ததும் குளிக்காததுமாக இரண்டு மூன்று சொக்காய்களைத் தூக்கிக் கொண்டு மாமியிடம் வந்து, "மாமி! இதிலே எதைப் போட்டுக் கொள்வது, சொல்லுங்கோ!" என்பான் பாலு. அவள் பொறுக்கி எடுப்பதைப் போட்டுக் கொள்வதில் அவனுக்கு அளவில்லாத ஆனந்தம். செல்லத்துக்கு மட்டும் என்ன? சந்திரனோடு விளையாட எண்ணும் குழந்தை அவன் பிரதிபிம்பத்தைக் கண்ணாடியில் கண்டு அமைதி அடைவதில்லையா? அது போல அவளுக்கும் தன் மனத்தி லிருந்த குழந்தை யில்லாக் குறை பாலுவின் மூலம் ஓரளவு நிவர்த்தி அடையத்தான் செய்தது.

திடீரென்று ஒருநாள் சீதாவுக்குச் செல்லத்தைப் பிடிக்காமல் போயிற்று. 'செல்லம் குழந்தையைக் கெடுத்து விடுகிறாள். ஆசை, அன்பு என்று சொல்லி அவனைக் குட்டிச் சுவர் ஆக்கி விடுகிறாள். கள்ளம் கபடு தெரியாமல் சமர்த்தாக இருந்த குழந்தையை மலட்டுப் புத்தியால் பாழ் செய்து விடுகிறாள்' என்ற எண்ணம் சீதாவின் உள்ளத்திலே வேரூன்றத் தொடங்கியது.

"மாமி, யாருடைய போதாத காலமோ, நான் இந்த வீட்டிலே காலடி எடுத்துவைத்த நாளாக என் குழந்தை பாலு என்னை விட்டுக் கணத்துக்குக் கணம் விலகிக்கொண்டே வருகிறான். பத்து மாதம் சுமந்து, பெற்று வளர்த்த என்னை உதாசீனம் செய்து உங்களிடம் ஒண்டிக் கொள்ளும்போது என்னால் எப்படித் தாங்க முடியும்? நீங்கள் கொஞ்சம் உங்களைப் போன்ற ஒரு பெண்ணுக்கு இரக்கம் காட்டக் கூடாதா!" என்று ஒரு சமயம் செல்லத்தைப் பார்த்துக் கேட்டாள் சீதா.



நாள் ஆக ஆகச் சீதாவின் கோபம் அதிகரித்தது.

ஒரு நாள், "மாமி! உங்களுக்குக் குழந்தை இல்லையே என்று என்னையும் குழந்தை அற்றவளாகச் செய்ய முயலாதீர்கள். எந்த ஜன்மத்தில் செய்த பாபமோ, உங்களை மலடாகச் செய்துவிட்டது. இன்னமும் பாபத்தைக் கட்டிக் கொண்டு நீங்கள் ஏழேழு ஜன்மத்துக்கும் இப்படி மலடாக அவதிப் படவேண்டாம்!" என்று ஆத்திரம் தீரச் சொல்லி விட்டாள்.

செல்லத்தின் மனம் துணுக்குற்றது. சீதா தனக்கு ஏதோ சாபம் கொடுப்பதாகத் தோன்றவே அவள் தன் ஆசையைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். பாலுவைக் கட்டுப்பாடிட்டுச் செல்லத்தின் பக்கம் செல்லாமல் சீதா பார்த்துக்கொள்ள ஆரம்பிக்கவே அவளுக்குப் பாலுவிடம் உள்ள நேரிடைத் தொடர்பு துண்டிக்கப் பட்டுவிட்டது. அதன் பலனைத் தனக்கு ஏற்பட்ட துக்கத்தை அடக்கிக்கொள்ளச் செல்லத்துக்கு இன்னொரு காரணமும் கிடைத்தது. அவள் அப்போது மூன்று மாதக் கர்ப்பிணி.

ஆனால் பாலு அடிக்கடி எப்படியோ மாமியைச் சந்திக்கத் தான் செய்தான். உண்மை அன்பை வெறும் கட்டுப்பாடுகளால் தளர்த்திவிட முடியுமா, என்ன?

★

எட்டு மாதங்கள் பறந்து சென்றன.

செல்லத்தின் வாழ்க்கையில் எவ்வளவோ மாறுதல்கள். அவள் மலட்டுத் தன்மையை நீக்குவதற்காகவே, பிறந்ததைப் போலப் பிறந்து குழந்தை சரியாக இருபது நாட்கள் உயிரோடு இருந்து மண்ணுலகைவிட்டு அகன்றது. குழந்தை இறந்த துயரத்தை விடத் தனக்கு நேர்ந்த துக்கத்தைப் பற்றிச் சீதா தன்னிடம் ஒரு வார்த்தைகூட விசாரிக்க வில்லையே என்ற குறைதான் செல்லத்துக்கு மனதை மிகவும் அதிகமாக அரித்தது.

அன்றைக்குப் பாலுவுக்கு நல்ல ஜுரம். மேலுலகத்திற்கும் பூவுலகத்திற்குமாக கிளித்தட்டு விளையாடிக் கொண்டிருந்தது அவன் உயிர்.

இரவு மணி பதினொன்று இருக்கும். திடீரென்று அவர்கள் வீட்டு விளக்கு அணைந்து விட்டது. கை விளக்கை ஏற்றலாம் என்றாலோ அன்றைக்கென்று வீட்டில் நெருப்புக்குச்சி தீர்ந்துவிட்டது.

அதே சமயம் பார்த்துப் பாலு பிதற்றத் தொடங்கி விட்டான். சீதா தன் கணவனை அனுப்பி, "ஏன்னா, அவரை வேண்டுமானால் கேட்டுப் பார்த்து நெருப்புப் பெட்டியை வாங்கிக் கொண்டு வாருங்களேன்.

பாலு வேறு ஏதோ முனகுகிருன். எனக்கு ரொம்பவும் பயமாக இருக்கிறது" என்று கையைப் பிசைந்தான்.

"ஆமாம். அவர்கள் வீட்டில் தூங்கி யிருந்தால்...?" என்று கேட்டான் அவன் கணவன்.

"ஒன்றும் தூங்கி யிருக்க மாட்டார்கள். செல்லம் என்னவோ விரதம் எடுத்துக் கொண்டிருக்கிருளாம். ஐந்து நாட்களாக ஈரப்புடவையுடன் தானுமாகத் தினம் இரண்டு தரம் ஏதோ ஸஹஸ்ரநாமம் படிக்கிருளாம். தன் குழந்தை செத்துப்போய்ச் சீதாவின் குழந்தை மாத்திரம் உயிரோடு இருக்கிறதே; அதையும் கொண்டு போய்விடு என்று பிரார்த்தனை செய்கிருளோ, என்னவோ!"

அவள் கணவன் சீறி விழுந்தான். "நன்ருயிருக்கிறதீ சீதா, உன் பேச்சு! ஒருவரைப் பிடிக்கவில்லை என்ருல் வாய்க்கு வந்தபடி பேசிவிடுவதா என்ன? இதோ பார், சிவராமய்யரும் வீட்டில் இல்லை. ஆபீஸில் 'நைட் ஷிப்டு' போட்டிருக்கிருர்களாம். நீதான் போய்த் தீப்பெட்டியை வாங்கிக் கொண்டு வர வேண்டும்" என்ருன்.

சீதா அரை மனதோடு தயங்கியபடியே செல்லத்தின் அறையை நோக்கி நடந்தாள்.

★

சீதா முன் கட்டுக்குச் சென்றபோது ஆபீஸுக்குச் சென்றிருந்த சிவராமய்யர் எதையோ எடுத்துக்கொண்டு போவதற்காக வந்திருந்தார். பேச்சுக் குரலைக் கேட்டு சீதா, ஒட்டுக் கேட்கும் இயற்கை சுபாவத்திற்குப் பழுதின்றி, இருந்த இடத்திலேயே நின்றபடி கவனிக்க ஆரம்பித்தாள். உள்ளே நடப்பது ஒவ்வொன்றையும் ஜன்னல் வழியே அவளால் நன்ருக அறிய முடிந்தது.

நடந்து வந்த களைப்புத் தீரச் சிவராமய்யர் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தார். செல்லம் ஈரப் புடவையுடன் சுவாமி படத்தருகில் அமர்ந்திருந்தாள்.



பெரியவர்:—நீ யாருடனும் சண்டை போடக் கூடாது. அவனை அப்படி அடிக்கலாமா? பகைவனிடங்கூட அன்பா யிருக்க வேண்டும் என்று பெரியவர்கள் சொல்லி நீ கேட்டதில்லையா?

பையன்:—நீங்கள் சொல்லுவது சரிதான். ஆனல் அவன் என் சகோதரன் அல்லவா?

அவனை உற்றுக் கவனித்த சிவராமய்யர் கோபத்தோடு, "என்ன செல்லம், சண்டித்தனம் செய்கிருய்? பச்சை உடம்பில் நீ ஈரப் புடவையோடு நாலு நாட்களாகக் காலம் கழிக்கிருயே? ஏதாவது உடம்புக்கு வந்தால் என்ன செய்வது? இன்னொரு குழந்தை பிறக்க வேண்டும் என்று எனக்கு மாத்திரம் ஆசையில்லையா? இந்த விரதத்தை ஆறு மாதம் கழித்து நோற்கக் கூடாதோ?" என்ருர்.

செல்லம் பகபகவென்று சிரித்தாள். "நமக்கு முன்பு குழந்தை பிறந்ததே? எந்த விரதம் முடித்துப் பிறந்தது? தானுகத்தானே? அது போல மற்ருெரு குழந்தை பிறந்து விட்டுப் போகிறது. நான் அதற்காக் கவலைப்பட



பைத்தியக்காரன் (ஆஸ்பத்திரி டாக்டரைக் கூப்பிட்டு):— ஸார், அந்தக் கடிகாரம் சரியாய்ப் போகிறதா?

டாக்டர்:— ஆமாம், சரியாகத் தான் போகிறது.

பைத்தியக்காரன்:— அப்படியானல் அதை எதற்காக இந்த ஆஸ்பத்திரியில் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்கள்?

வில்லை. குழந்தை பாலுவுக்காகத்தான் இந்த விரதம் எல்லாம்'' என்ருள்.

சீதாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கடைசியில் அவள் நினைத்தபடி பாலு இறந்து விட வேண்டும் என்பதற்காகத்தானு இந்த விரதம்? சீதாவைப் போலவே சிவராமய்யரும் ஆச்சரியப்பட்டார். "என்ன? பாலுவுக்காகவா? என்ன சொல்கிருய், செல்லம்?'' என்று கேட்டார்.

விம்மிக்கொண்டே செல்லம், "பாலுவுக்கு ஐந்து நாட்களாக உடம்பு அதிகமாக இருக்கிறதாம். ராகவேந்திரர் விரதம் இருந்தால் அந்தக் குழந்தைக்குச் சரியாகப் போய்விடும் என்று அடுத்த வீட்டுப் பாட்டி சொன்னுள். ஆயிற்று; இன்ரோடு கடைசி நாள். நாளைக் காலையில் பாலு எழுந்து நடமாட ஆரம்பித்து விடுவான்!'' என்று கூறினுள்.

சீதா அப்போதும் உள்ளே நுழையவில்லை

சிவராமய்யர் "பெண்கள் மனமே விசித்திரமாயிருக்கிறது, செல்லம். மலட்டுத்தனம் நீங்க வேண்டுமே என்று நீ விரதம் இருக்கவில்லை. உன் குழந்தை பிழைக்க வேண்டுமே என்று நோன்பு நோற்கவில்லை. ஊரார் வீட்டுப் பாலு பிழைக்க வேண்டுமே என்று ஐந்து நாட்களாக உயிரைவிட்டுக் கொண்டு பிரார்த்தனை செய்கிருயே?'' என்ருர்.

செல்லம் மறுபடியும், "ஆமாம். எனக்கென்ன? நான்தான் மலடி அல்ல என்று தெரிந்து விட்டது. தானுக இன்னென்று பிறக்கிறது! அப்படிப் பிறக்கா விட்டாலும் குழந்தை இல்லாமல் பழக்கப்பட்டுப் போனவள்தானே நான்? நோஞ்சலாக இருக்கும் சீதா, இனிப் பின்னைப் பிறப்புக்கு ஆளாகக் கூடாதென்று வேறு டாக்டர் சொல்லி இருக்கிருராம். பாலு பிழைத்து விட்டால் அவளுக்குச் சர்வமும் கிடைத்தாற்போல் அல்லவா? அதனுல்தான்...'' என்ருள்.

சீதா பரபரவென்று உள்ளே நுழைந்தாள். "மாமீ, என்னை மன்னித்து விடுங்கள். குழந்தையைப் பெற்றெடுத்தேனே தவிர உண்மைத் தாயன்பு என்னவென்று தெரியாத அறிவிலி நான். இந்த அறியாமையால் உங்கள் மாசற்ற அன்பையும் உதாசினம் செய்து கண்டபடி பேசினேன். என்னை மன்னித்து விட்டேன் என்று சொல்லுங்கள்'' என்று விம்மி விம்மிக் கதறி அழுதாள் சீதா.

செல்லம், "வேண்டாததற்கு எல்லாம் உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள். யானைக்கும் அடி சறுக்கும். அது போகட்டும், குழந்தைக்கு இப்போது எப்படி இருக்கிறது? டாக்டர் என்ன சொன்னர்?'' என்ருள்.

சீதா விவரமாக நடந்ததைச் சொல்லி, "மாமி! உங்கள் பொறுப்பை ஏற்றுக் கொள்ள நீங்கள் அங்கே வந்து விடுங்கள். இனி, பாலுவைக் கவனிக்க வேண்டியது உங்கள் பாடு'' என்ருள்.

செல்லம் மெள்ளச் சிரித்தாள். "இன்னும் ஐந்து மணி நேரம் பொறுத்துக் கொள்ளுங்கள். என் விரதமும் முடிந்து விடும். பாலுவும் பிழைத்து விடுவான்'' என்ருள்.

அன்றைக்கு மறுநாள் டாக்டர் பாலுவைப் பற்றிப் பயமில்லை என்று சொன்னர். பிரக்ஞை தெளிந்ததும் தெளியாததுமாகப் பாலு பார்த்தது மாமியைத்தான். "மாமி!'' என்று சொல்லிக்கொண்டே அவன் செல்லத்தைக் கட்டி யணைத்துக் கொண்டதைக் கண்ட சீதாவின் கண்களில் நீர் துளித்தது.

★

[illegible]களின் நினைவிலே ஒன்றிப் போயிருந்த செல்லம் தன் மடியில் பாலு உட்கார்ந்திருந்ததைக் கவனிக்கவே இல்லை.

பாலு அவள் முகத்தைத் திருப்பித் தன் கழுத்தைச் சாய்த்து, "மாமி, நான் அப்பவே வந்து விட்டேன். நீ என்னவோ யோசிச்சுண்டே இருந்தாயே, உன் பாப்பா இல்லையென்ரு? நான் இருக்கேனே, உனக்குப் போதாதா?'' என்ருன் தன் மழலைமொழியால்.

செல்லம் அவனை வாஞ்சையோடு அணைத்து முத்தமிட்டாள். "உனக்குத் தம்பிப் பாப்பாவோ, தங்கைப் பாப்பாவோ பிறக்குமடா! இன்னும் ஆறே மாதம் பொறுத்துக் கொள்!'' என்று சொன்னபோது அவளுக்குத் தன் வயிற்றில் நான்கு மாதக் குழந்தை நகர்வது போன்ற பிரமை ஏற்பட்டது.




# வீரனின் வஞ்சம்

கன்னடக் கதை: ஆர். பி. குல்கர்னி                மொழிபெயர்ப்பு: வாஞ்சி

(சென்ற வாரத் தொடர்ச்சி)

**ப**யத்தினால் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தரு வாயில் இருந்த எனக்கு அப்போது கேட்ட ஒரு குரல் மறுபடியும் தைரியத்தைக் கொடுத்தது.

"ஆராய்ச்சி நிபுணனே! ஏன் உன் கண்களை இப்படி இறுக மூடிக் கொண்டு விட்டாய்!" என்றது அந்தக் குரல்.

மெதுவாகக் கண்களைத் திறந்தேன்.

"பாவம்; உன் தேகம் ஏன் இப்படி நடுங்குகிறது! என்னைக் கண்டு பயந்து விட்டாயா! நீ பயப்பட வேண்டிய அவசியமில்லை. நான் உனக்கு எவ்விதத் தீங்கும் செய்யப் போவதில்லை. ஆனால் நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். இந்தக் கல்வெட்டில் உள்ள விவரங்களை நீ குறித்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா! அதை நெருப்பில் போட்டு எரித்து விட வேண்டும். அதில் உள்ள விவரங்களை நீ யாரிடமும் கூறக் கூடாது."

அந்த ராட்சத உருவம் இவ்வாறு கூறிய பின் தான் எனக்குச் சிறிது ஸ்மரணை உண்டாயிற்று. என்னைத் தன் சுண்டு விரலால் தள்ளிக் கொன்று விடக் கூடிய அவ்வளவு பெரிய உருவம் மனிதனைப் போல் சமாதான தோரணையில் பேசியது எனக்குத் தைரியத்தைக் கொடுத்தது.

நான் என் சட்டைப் பையில் குறித்து வைத்துக் கொண்டிருந்த காகிதத்தைப் பார்த்த போது அதைக் காணவில்லை. நான் திடுக்கிட்டேன்.

அந்த உருவம் மீண்டும் பேய்ச் சிரிப்பொன்று சிரித்தது. "அந்தக் காகிதம் இதோ என் கையில் இருக்கிறது. உன் ஆராய்ச்சி சாதனங்கள் வைக்கப் பட்டிருந்த பெட்டியைப் பார்! அதை நான் இங்கிருந்து வெகு தூரத்தில் உள்ள கடலில் எறிந்து விட்டேன்" என்று சொல்லி விட்டு மறுபடியும் பயங்கரமாகச் சிரித்தது.

அந்தச் சிரிப்பு என் குலை நடுங்கும்படி செய்தது. என் தலைக்கு அருகில் வைத்திருந்த பெட்டியைப் பார்த்தேன். அதை அவ்விடத்தில் காணவில்லை!

"அந்தக் காகிதம் உன் கையில் இருப்பது என் உயிர் உன் கையில் இருப்பது போலத்தான்! அதனால்தான் அதை எடுத்துக் கொண்டு விட்டேன்" என்றது அவ்வுருவம்.

"நீ கூறுவதை நம்ப முடியவில்லையே! அந்தக் காகிதம் அவ்வளவு முக்கியமானதா!" என்றேன்.

"ஆம். இந்தக் கல்வெட்டுகளில் என்னைப் பற்றிக் கூறியுள்ள விவரங்களை நீ வெளி யிட்டால் அவற்றை உண்மை என்று ஜனங்கள் நம்பிவிடுவார்கள். பிறகு என் ஆத்மாவுக்குக் கதி மோட்சமே இல்லாமல் போய்விடும்."

"ஏன் கதி மோட்சம் ஏற்படாது!" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"அதெல்லாம் உண்மையல்ல. என்னைப் பற்றிய உண்மை விவரங்களை ஜனங்கள் அறிந்து கொண்டால்தான் எனக்குக் கதி மோட்சம் உண்டாகும்."

"அந்த விவரங்களை நான் கேட்கலாமா!"

"அவ்விவரங்களை நீ நம்புவாயா! அவற்றை ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி எனக்கு நானே அமைத்துக் கொண்ட இந்தச் சிறையிலிருந்து எனக்கு விடுதலை அளிப்பாயா!"

"அப்படியே செய்கிறேன்" என்றேன். அந்த உருவம் கூறப் போகும் விஷயங்களைக் கேட்க என் மனம் துடித்தது.

• • •

**அ**ந்த உருவம் சொல்லத் தொடங்கியது.

"இப்போது இந்த என் உருவத்தைக் கண்டு பயந்து விட்டாய் அல்லவா! இதில் ஆச்சரியம் எதுவுமில்லை. ஏனெனில் நான் உன்னைப் போன்ற சரீரத்துடன் இந்த உலகில் இருந்த போது கூட என்னைக் கண்டு எவரும், வீரர்கள் கூடப் பயப்படத்தான் செய்தார்கள்.

நான் பூமியில் மனிதனாக இருந்த போது ஆறரை அடி உயரம் இருந்தேன். என் உருவத்தையும் மீசையையும் வலிமையையும் கண்டு ராஜாக்களும் சேனைகளும் கூட நடுங்கியது உண்டு!

இந்தக் கோவில் நிர்மாணம் ஆவதற்கு முன் இந்தப் பிரதேசமெல்லாம் அடர்ந்த காடாக இருந்தது; புலிகள், சிறுத்தைகள் முதலிய கொடிய மிருகங்களின் வாசஸ்தலமாக இருந்தது.

வருஷந்தோறும் தேவகிரி மன்னன் இங்கு வேட்டையாடுவதற்காக வருவது வழக்கம். ஒரு சமயம் அந்த மன்னன் இந்தக் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்த போது புதர் மறைவில் படுத்துக் கொண்டிருந்த ஒரு பெரிய புலி அவன் மீது பாய்ந்து விட்டது. மேற்படி சம்பவம் திடீரென்று நேர்ந்ததால் மன்னனின் வாள் தூரத்தில் போய் விழுந்தது. மன்னனும் கீழே சாய்ந்தான்.

பக்கத்திலிருந்த நான் அந்தப் புலியின் வாயில் ஒரு கையை விட்டு, மற்றொரு கையால் அதன் கழுத்தை வெட்டி வீழ்த்தினேன்.''

''ஆஹா! என்ன வீரத்தனம்!'' என்றேன் என்னையறியாமல்.

''ஆம். வீரத்தனம்தான். அதைத் தேவகிரி மன்னனே பிரமாதமாகப் பாராட்டினான்.

மேற்படி மன்னனின் உயிரைக் காப்பாற்றியதற்காக அவன் எனக்கு இந்தப் பிராந்தியம் முழுவதையும் கொடுத்தான்; இந்தப் பிரதேசத்துக்கு என்னையே அரசனாகச் செய்தான். இவ்வாறாக, அரசனின் சாதாரண சிப்பாய்களில் ஒருவனாக இருந்த நான் ஒரு பிரதேசத்துக்கே அரசன் ஆகிவிட்டேன்!

மன்னனான என் காலடியில் விலைமதிக்க முடியாத பொக்கிஷங்கள் வந்து குவிந்தன. சுக போகங்களை அனுபவிப்பதற்குற்ற சகல வசதிகளும் எனக்குக் கிடைத்தும் கூட வாழ்க்கையில் எனக்கு இன்பம் ஏற்படவில்லை.''

''ஏன் இன்பம் ஏற்படவில்லை!'' என்று ஆர்வத்துடன் கேட்டேன். அந்த ராக்ஷத உருவம் நேருக்கு நேராகக் கூறிய கதையின் சுவாரஸ்யத்தில், என் மனதில் ஏற்பட்ட பீதி யெல்லாம் மறைந்து விட்டது!

''புலி கடித்ததால் என் இடது கையை நான் இழக்க நேர்ந்தது. 'நீங்கள் அரசராக இருக்கிறீர்கள்; லட்சணம் வாய்ந்த புருஷராகவும் வீரராகவும் திகழ்கின்றீர்கள். எனினும் உங்களுக்கு ஒரு கை இராததைப் பார்க்கும் போது என் இருதயத்திலிருந்து உதிரம் பெருகுவது போல் இருக்கிறது'' என்று என் மனைவி உமா அடிக்கடி கூறியதே என் மனக் கஷ்டத்துக்குக் காரணம்.

தவிர, ராஜ்ய காரியமாக நான் அடிக்கடி வெளியே நகரங்களுக்குச் செல்ல வேண்டியிருந்ததால் எப்போதும் உமாவுடன் இருக்க முடியவில்லை. அடிக்கடி நான் அவளைப் பிரிந்து செல்ல நேர்ந்தது உமாவின் மனத் துயரத்தை அதிகப்படுத்தியது.

அவளுடைய துயரத்துக்கு மற்றொரு முக்கிய காரணமும் இருந்தது. எங்களுக்கு விவாகமாகிப் பல வருஷங்கள் கடந்து விட்டன. அப்படியிருந்தும் ஒரு குழந்தைக்குத் தாயாக இருக்கும் பாக்கியம் தனக்குக் கிடைக்கவில்லையே என்று உமா சதா உருகிக் கொண்டிருந்தாள்.

மறு விவாகம் செய்துகொள்ளும்படி அவள் கண்ணீரும் கம்பலையுமாக என்னை அடிக்கடி கெஞ்சத் தொடங்கினாள். இதிலிருந்து அவளது மனம் எவ்வளவு பரிசுத்தமானது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

நானோ என் வாழ்க்கையில் உமாவைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் மனதினால்கூட நினைக்க மாட்டேன் என்று கண்டிப்பாகக் கூறிவிட்டேன். இவ்விதம் நான் கூறியதைக் கண்டு ஆனந்தமடைய வேண்டிய உமா, 'கடசித்த காயக்க மன்னரின் வம்சம் வளராமல் இத்துடன் அழிந்து விடுவதா!' என்று அடிக்கடி புலம்பத் தொடங்கினாள். அவளைச் சமாதானப் படுத்துவது எனக்கு மிகவும் கஷ்டமாகியது.''

* * *

''வருஷா வருஷம் தேவகிரி மன்னன் காட்டுக்கு வேட்டையாட வரும்போதெல்லாம் என் மாளிகையில் தங்குவது வழக்கம். ஒரு சமயம் உமா அந்த மன்னனை அணுகி, என்னை இரண்டாவது மணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்துமாறு வேண்டிக் கொண்டாள்.

உமாவின் மனோ நிலையை அறிந்த தேவகிரி மன்னன் எனக்கு எவ்வளவோ புத்திமதி சொன்னான். என் வம்சம் வாழையடி வாழையாக விளங்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினான். ஆனால் அந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் தலையிட வேண்டாம் என்றும், குழந்தைகள் பிறந்தாலும் பிறக்காவிட்டாலும் உமாவைத் தவிர வேறு ஒரு பெண்ணை நான் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன் என்றும் பிடிவாதமாகக் கூறிவிட்டேன்.

அடுத்த வருஷம் வேட்டையாடுவதற்காக வந்த தேவகிரி இளவரசனும் என் மாளிகையிலேயே என் விருந்தினனாகத் தங்கினான்.

ஆனால் அச்சமயம் ஒரு சிற்றரசன் கப்பம் கட்டத் தவறி விட்டதால் அவனைச் சிட்சிப்பதற்காக நான் அவன் ஊருக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அங்கு சென்றுவிட்டு நான் திரும்பி வந்தபோது இளவரசனைக் காணவில்லை. என் உயிருக்கு மேலாக இருந்த உமாவையும் காணவில்லை!

அவ்விருவரும் எனக்கு இழைத்த துரோகத்தைக் கண்டு மனம் புழுங்கினேன். இளவரசனின் தந்தையின் உயிரை நான் காப்பாற்றினேன். அதற்கு இளவரசன் செய்த பிரதி உபகாரம் இது



தானு என்று துடித்தேன். உமா இஷ்டப்பட்டு அவனுடன் சென்றுளா அல்லது அவன் பலாத்காரமாகத் தூக்கிச் செல்லப் பட்டாளா ! எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

என்னைக் கோப வெறி ஆட்கொண்டது. 'வஞ்சம்', 'வஞ்சம்' என்ற குரல் என் செவிகளில் ரீங்காரம் செய்தது. தேவகிரி இளவரசன் உமாவை என்னிடமிருந்து அபகரித்தான்; என் ஹிருதய ராணியைக் கொள்ளை கொண்டான்; என் குடும்ப வாழ்வைக் குலைத்தான் அல்லவா ! அப்பேர்ப்பட்ட இளவரசனையும் அவனது தந்தையையும் சிம்மாசனத்திலிருந்து தலை குப்புறத் தள்ளிவிட்டு மறு காரியம் பார்ப்பதென்று உறுதி கொண்டேன்.

அவன் பெரிய மன்னன் ஆனதால் அவனை எதிர்த்துப் போரிடுவதாயின் ஏராளமான சேனைகள் வேண்டும். உடனே சேனைகளைச் சேகரிக்கத் தொடங்கினேன். அதற்கு ஏராளமான தொகை வேண்டியிருந்ததால் ஜனங்களையும் சிற்றரசர்களையும் கசக்கிப் பிழியும்படியும் கொள்ளையடிக்கும்படியும் கட்டளை யிட்டேன். எங்கும் என் சிப்பாய்கள் செய்த சித்ரவதைகளைப் பற்றிய புகார்கள் எழுந்தன. அவற்றிற்கு நான் செவி கொடுக்கவில்லை. 'வஞ்சம்' 'வஞ்சம்' என்ற ஒரே விஷயமே என் வாழ்க்கையின் லட்சியமாகியது ! அதற்காக எவ்வளவு கொள்ளை யடிக்கவும் கொலைகள் செய்யவும் நான் பின்வாங்கவில்லை.

தேவகிரி மன்னன் சார்பில் போருக்கு வந்தவர்களை யெல்லாம் வெட்டி வீழ்த்திப் பல பள்ளத்தாக்குகளையும் மேடாக்கினேன். தேவகிரி இளவரசன் என் மனைவியைத் தூக்கிச் சென்றதற்குப் பிரதியாக அந்த மன்னனின் பிரஜைகளுடைய மனைவிமாரைத் தூக்கி வரும்படி என் சிப்பாய்களுக்குக் கட்டளையிட்டேன். என்னைக் கண்டு எல்லோரும் நடுங்க ஆரம்பித்தனர். அக்கிரமமான, ஆண்மையற்ற காரியங்களை எக்காலத்திலும் செய்யத் துணியாத என் மனம் இவ்வாறு நிஷ்டூரென்று மாறியதைக் கண்டு தேவகிரி மன்னன் கூட ஒன்றும் தெரியாமல் திகைத்தான்.

யாரும் கண்டும் கேட்டும் அறியாத என் அட்டூழியங்களைக் கண்டு நடுங்கிய மற்ற ராஜ்ய மக்கள் கூட என் பிரஜைகளாகி விடுவதாக மன்றாடினர். என் அட்டூழியங்களைக் கண்டு நானே நடுங்கி விட்டேன் !

அப்போதுதான் என்னால் பலியானவர்களின் பிரேதக் குவியலின் மீது இந்தக் கோவிலை நிர்மாணிக்க ஏற்பாடு செய்தேன். அதில் கடவுளையும் பிரதிஷ்டை செய்தேன். நான் செய்த அட்டூழியங்களை, பாதகங்களை மறைத்து எதிர்காலத்தில் ஜனங்களிடம் நல்ல பெயர் வாங்குவதற்காக ஏழைகளுக்குப் பொன்னை வாரிக் கொடுத்தேன். ஏராளமாகப் பூமிதானம் செய்தேன். உடனே பேதை மக்கள் என்னைப் புகழ்ந்தார்கள். என் 'பெருமைகளை' இந்தக் கற்களில் செதுக்கும்படி கட்டளை யிட்டவனும் நான்தான் !

போரையும் பாதகச் செயல்களையும் நிறுத்தி விடும்படி தேவகிரி மன்னன் எனக்கு அடிக்கடி செய்தி அனுப்பினான்.

'உனக்கும் எனக்கும் போர் என்பதை நினைக்கவே என் மனம் கூசுகிறது. நான் உனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லையே ! உன்னை என் மகனுக்குச் சமமாகக் கருதுகிறேன். உமாவைப் பற்றி எங்களுக்கு ஏதுவுமே தெரியாது, அப்பனே ! போரை நிறுத்து, போரை நிறுத்து' என்று தேவகிரி மன்னன் அடிக்கடி செய்தி அனுப்பினான்.

இந்தப் பகட்டு வார்த்தைகளைக் கண்டு ஏமாறுபவனா நான் ! என் பலம் நாளுக்கு நாள் அதிகமாகி வருவதைக் கண்டு தேவகிரி மன்னன் நடுங்கி அவ்வாறு செய்தி அனுப்பினான் என்பது கூடவா எனக்குத் தெரியாது !"

* * *

"கடைசியாகத் தேவகிரி மீது படையெடுக்கத் தீர்மானித்தேன். நான் வெற்றி பெற்றால் இன்னும் என்ன ஆபத்துக்கள் நேருமோ என்று பயந்த சிற்றரசர்கள் யாவரும் தேவகிரி மன்னன் பக்கத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

பல நாட்கள் வரையில் அகோரமாகப் போர் நடந்தது. இறுதியில் என் துருப்புகளே தோல்வியுற்றன. நாங்கள் எங்கள் கோட்டைக்குப் பின்வாங்கி வரும்படி நேர்ந்தது.

பின்னர் எதிரிகள் கோட்டையையும் தாக்கியதால் அங்குள்ள இரகசிய வழியாக நாங்கள் தப்பி, இந்தக் கோவிலுக்குள் வந்து புகுந்து கொண்டோம்.

தேவகிரி மன்னன் தெய்வ பக்தியுள்ளவனானதால், இந்தக் கோவிலைத் தாக்கவோ, கோவிலுக்கு அருகில் போர் புரியவோ விரும்பவில்லை. எனினும் அவர்கள் வெளியே முற்றுகை யிட்டதால் என் சிப்பாய்கள் பட்டினி கிடக்க முடியாமல் கடைசியில் சரண் புகுந்தனர்."

"இத்துடன் உன்னுடைய வஞ்சவெறி தணிந்ததா !" என்றேன்.

"இத்துடன் முடிந்திருந்தால் எவ்வளவோ மேலாக இருக்கும்" என்று அந்த உருவம் ஒரு பெருமூச்சு விட்டு மேலும் சொல்லத் தொடங்கியது.

"தோல்வியால் என் மனம் துடித்தது. என்னைத் தோற்கடித்து அவமதித்த தேவகிரி மன்னனுக்குச் சரியான பாடம் கற்பிக்கத் தீர்மானித்தேன். என் வஞ்ச வெறி தணியாததால் என்னைக் காட்டிலும் பலம் பொருந்திய ஒரு சேனையின் துணை கொண்டு தேவகிரி மன்னனின் படைகளை எதிர்த்துப் போராட உறுதி கொண்டேன்.

அச் சமயம் கொடிய அலாவுதீன் கில்ஜி தென் விந்தியாமீது படை யெடுக்கப் போவதாக பலமான வதந்தி உலாவியது. இந்த வதந்தி எனக்கு மிகுந்த ஆனந்தத்தையும் நம்பிக்கையையும் கொடுத்தது! எனது உதவியையும் ஒத்துழைப்பை



யும் கில்ஜி பரவசத்துடன் வரவேற்றான். 'உங்களைப் போன்றவர்களின் உதவியால்தான் நான் வெற்றி பெற முடியும்' என்று புகழ்ந்தான். என்னைத் தன் சிறந்த நண்பனாகக் கருதினான்.

கில்ஜியின் சேனைகள் தேவகிரிமீது படையெடுத்தன. என் சேனைகள் தேவகிரி மன்னனுக்கு உதவியாகச் சிற்றரசர்கள் வராமல் தடுத்தன. அவ்வளவுதான்! தேவகிரி மன்னன் தோல்வியடைந்தான். அதைக் கண்டு நான் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

உடனே என் கோட்டைக்கு அலாவுதீனை வரவேற்று வெகு ஆடம்பரமாக வெற்றி விழாக் கொண்டாட ஏற்பாடு செய்தேன்.

வெற்றி விழா நடந்து கொண்டிருக்கையில் அலாவுதீன் கில்ஜி முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாட என் அருகில் வந்தான்.

'நீங்கள்தான் எனக்குச் சிறந்த நண்பர். நீங்கள் இஸ்லாம் மதத்தில் சேர்ந்து விட்டால் தென்னிந்தியா முழுவதற்கும் உங்களைச் சுபேதாராக நியமித்து விடுகிறேன். நாளைக்குள் உங்களுடைய தீர்மானம் என்ன என்பதைத் தெரிவியுங்கள்' என்றான்.



இதைக் கேட்டதும் நான் திடுக்கிட்டேன். என் உதவியால் வெற்றி பெற்ற கில்ஜி அதற்குள் அவ்விதம் கூறத் துணிவான் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. எனினும் அவன் கூறியதற்கு இசைந்தால் தென்னிந்தியா முழுவதற்கும் நான் சர்வாதிகாரியாகி விடலாம் அல்லவா!

மதம் மாறுவது நியாயமாகுமா என்ற கேள்வி என் மனதில் எழுந்தது.

அப்போது உமாவின் ஞாபகமும் எனக்கு ஏற்பட்டது. உமா போனதற்காக நான் வஞ்சம் தீர்த்துக் கொண்டு விட்டேன். இதற்கு முன் உமாவைப் பற்றிய எண்ணம் என் மனதில் எழுந்த போதெல்லாம் எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆனால் அன்றோ உமா என் எதிரில் நின்று கொண்டு 'மதம் மாறாதீர்கள்' என்று கெஞ்சுவது போல் தோன்றியது. வெறுப்பினால் என் முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டேன். ஆம், என்னை விட்டு ஓடிப்போனவளைப் பார்க்க என் மனம் இசையுமா!

மதம் மாறினாலும் மாறாவிட்டாலும் உமாவின் பெட்டிகளில் உள்ள அவளுக்குச் சொந்தமான சகல சாமான்களையும் வைத்து எரிக்கத் தீர்மானித்தேன்.

உடனே வெறிபிடித்தவனைப் போல் அவள் பெட்டிகளில் இருந்த சாமான்களையெல்லாம் எடுத்து வெளியே தூக்கி எறிந்தேன்.

ஒரு பெட்டிக்கு அடியில் அழகாக மடிக்கப்பட்ட ஒரு கடிதம் இருந்தது.

'ஐயோ! உமா அல்லவா எழுதியிருக்கிறள்!' என்று வாய் விட்டு அலறினேன்.

"என் ஆருயிர்ப் பிராணநாதா! நான் இந்த உலகத்தை விட்டுச் செல்லுகிறேன். நான் உயிருடன் இருக்கும் வரையில் நீங்கள் மற்றொரு பெண்ணை மனைவியாகக் கொள்ள மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். அதற்கும் நாயக்க மன்னரின் வம்சம் விளங்குவதற்கும் நான் முட்டுக் கட்டையாக இருக்கக்கூடாது என்றே இந்த முடிவுக்கு வந்தேன். தேவகிரி இளவரசனைப் போல் நமக்கும் இளவரசன் இருக்க வேண்டாமா! என்னை மன்னித்து விடுங்கள்.—உமா."

மேற்படி கடிதத்தை வாசித்து முடிப்பதற்குள் நான் தள்ளாடிக் கொண்டு கீழே விழுந்தேன். அப்படியே வானம் இடிந்து என் தலையில் விழக் கூடாதா! பூமி பிளந்து இந்தப் படுபாவியை விழுங்கிவிடக் கூடாதா! என் தலை சுக்கு நூறாக வெடித்து விடக் கூடாதா! இவற்றில் அப்போது எது நடந்திருந்தாலும் அதை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்றிருப்பேன்!

உத்தமியான உமாவை நான் சந்தேகித்தேனே! அவள் எனக்காகச் சுகபோகங்களை மாத்திரமல்ல, உயிரைக்கூடத் தியாகம் செய்து விட்டாளே! அவள்மீது சந்தேகம் கொண்டு என்னென்ன அட்டூழியங்களைச் செய்து விட்டேன்! நிரபராதியான தேவகிரி மன்னனையும் அவன் ராஜ்யத்தையும் அநாதையாகி விட்டேனே!

இப்படி யெல்லாம் பல வாறாக எண்ணி என் மனம் துடித்தது. நான் தலையில் அடித்துக் கொண்டு அலறினேன்.

மதம் மாறும் விஷயமாக என் மனதில் நடந்த போராட்டம் கொடிப் பொழுதில் தீர்ந்து விட்டது. "மதம் மாற முடியாது" என்று அதே விநாடியில் கில்ஜிக்குச் செய்தி அனுப்பிவிட்டேன்.

என் பதிலைக் கேட்டதும் கில்ஜியின் கண்களி லிருந்து கோபப் பொறி பறந்தது.

அவ்வளவுதான்! என் சிப்பாய்களுக்கும் கில்ஜியின் சிப்பாய்களுக்கும் அகோர யுத்தம் நடந்தது. என் சிப்பாய்கள் தோல்வியுற்றுக் கோவிலுக்குள் அடைக்கலம் புகுந்தனர்.

நான் நிர்மாணித்த கோவிலுக்கு அருகில் போரை நடத்த தேவகிரி மன்னன் விரும்பவில்லை. ஆனால் கில்ஜி அப்படி இருப்பானா!

கோவிலைத் தரை மட்டமாக்க உத்தரவிட்டான். உள்ளே பிரவேசித்து என் சிப்பாய்களைப் படு கொலை செய்தான். விக்கிரகங்களை உடைத்தான். நான் தன்னந்தனியனாகப் போர் செய்தேன். இறுதியில் இதே இடத்தில்தான் அவனும் அவனது சிப்பாய்களும் என்னை வெட்டி வீழ்த்தினார்கள். இதே இடத்தில்தான் என் உயிர் பிரிந்தது.

என் தேகத்தை விட்டுத்தான் உயிர் பிரிந்ததே யன்றி, அன்றிருந்து இன்று வரையில் என் உயிர் ஆவி ரூபமாக இந்த இடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. இந்தக் கல்வெட்டில் என்னைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது முற்றிலும் பொய். நான் உண்மையில் பெரும் பாவி என்பதை ஜனங்கள் தெரிந்து கொண்டால்தான் எனக்குக் கதிமோட்சம் ஏற்படும். என் ஆன்மா சாந்தி யடையும்."

சித்தநாயக்கரின் ஆவி உருவம் கூறிய மேற்படி கதையைக் கேட்டு என் உடல் சிலிர்த்தது.

"உன்னைப் பற்றிய உண்மை விவரங்களை நான் மக்களுக்கு எடுத்துக் கூறுகிறேன்" என்றேன்.

"ஆனால் இவற்றை ஜனங்கள் நம்புவார்களா!"

"நம்பும்படி நான் செய்கிறேன்" என்று உறுதி கூறினேன்.

உடனே அந்த உருவம், "மிகவும் பசியாகவும் தாகமாகவும் இருக்கிறது" என்று சொல்லிற்று.

"என்னிடம் ஒன்றுமில்லை. நிங்காவிடம் அவன் கொண்டு வந்த ரொட்டிகள் இருக்கின்றன" என்றேன்.

உடனே அது தன் பிரம்மாண்டமான கையை நீட்டி அந்த ரொட்டிகளை எடுத்துக் கொண்டது. அங்கிருந்த பெரிய பானையை எடுத்து அங்கிருந்த படியே சிறிது தூரத்திலிருந்த ஓடையிலிருந்து தண்ணீரை எடுத்து ஒரே வாயில் குடித்துவிட்டது!

"உனக்கு நன்றி. நான் போகிறேன்" என்று அது கூறியபோது, அதன் கையிலிருந்த பானை ஒரு தென்னைமர உயரத்திலிருந்து கீழே விழுவதுபோல் விழுந்ததால் அது சுக்கு நூறாக உடைந்துவிட்டது.

* * *

அந்தச் சத்தத்தைக் கேட்டு நிங்கா திடுக்கிட்டுப் போய் எழுந்தான்.

"நிங்கா, அதோ அரச மரத்துக்குச் சரியாக உயரமாய் நிற்கும் ராக்ஷத உருவத்தைப் பார்" என்றேன் பரபரப்புடன்.

நிங்கா அதைப் பார்த்துவிட்டுச் சிரிக்கத் தொடங்கினான். "அரசமரத்தின் நிழலைக் கண்டு இப்படிப் பயந்து போவீர்களே!" என்றான்.

"உன் ரொட்டிகளை அந்த உருவம் எடுத்துத் தின்று விட்டது" என்றேன்.

"பாவம்! உங்களுக்குப் பசியாக இருந்தது என்றால் நான் கோபித்துக் கொள்ளப் போகிறேனா!" என்று கேலி செய்தான்.

"இந்தப் பானையை உடைத்தது அந்த உருவம் தான். அதுதான் சித்த நாயக்க மன்னனின் ஆவி" என்றேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. ஏதாவது கனவு கண்டிருப்பீர்கள். மணி பன்னிரண்டுதான் ஆகிறது. பேசாமல் தூங்குங்கள்" என்றான்.

என் பெட்டி காணாமற் போகாமல் இருந்திருந்தால், பானை உடையாமல் இருந்திருந்தால், நிங்காவின் ரொட்டிகள் மறையாமல் இருந்திருந்தால் நான் கூட மேற்படி சம்பவத்தைக் கனவு என்று தான் நினைத்திருப்பேன்!

"இவற்றையெல்லாம் நீயாவது நம்புகிறாயா!" என்று கடைசியாக மூர்த்தி என்னைக் கேட்டான்.

"நம்புகிறேன்" என்று சொல்லி வைத்தேன். சித்த நாயக்க மன்னனின் ஆவி கதிமோட்சம் அடைய வேண்டாமா!



"அன்றைக்கு நீ பார்த்தாயே நாடகம் அது சந்தோஷமாகத்தானே முடிந்தது?"

"ஆமாம். சந்தோஷமான முடிவுதான். அந்த நாடகம் முடிந்ததே என்று எல்லோரும் சந்தோஷப் பட்டார்கள்!"

அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில் – நாள்முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீராக



டால்கம் பவுடர்



பள பள
வென்று ஜொலிக்கும்
புதுமைக்கு காஷ்மீர் புக்கே
டால்கம் பவுடரை உங்கள்
மேல் தாராளமாகத் தூவுங்கள்.
அது அதிகக் கசிவை உறிஞ்சுகிறது... எரிச்சலையும்
அரிப்பையும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக்
குளிமையுடனும் இனிய வாசனையுடனும், நாள்
முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

# காஷ்மீர் புக்கே

## மானிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்

1806 லிருந்து கோல்கேட் உயர்ந்த ரகத்திற்குப் பெயர்போனது.

---

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 12. ஜலதோஷம்

ஜலதோஷத்தால் பிடிக்கப்படாதவர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். எல்லோருக்கும் அதன் சிரமம் தெரியும். முதலில் மூக்கில் ஜலமாகக் கொட்டும். பிறகு சளியாக வரும். சிலர் கைக்குட்டையும் கையுமாக இருப்பார்கள். மூக்கைத் துடைத்துத் துடைத்து சிவந்துவிடும். சிலருக்குக் கண்களிலிருந்தும் ஜலம் கொட்டும். மூக்கடைப்பு ஏற்படும். மொன, மொன வென்று பேசுவார்கள். சிலருக்குத் தொண்டையும் அடைத்துக் கொள்ளும். பேசினால் சத்தம் கேளாது. சிலருக்கு ஜலதோஷம் பிடித்தால் காது வலி வந்துவிடும். சிலருக்குத் தலைவலியும் வருவதுண்டு. இருமவும் செய்வார்கள்.

முதலில் ஜலதோஷம் மிக அற்பமான வியாதியாய்த் தோன்றினாலும் அதுவே பல வியாதிகளுக்கு மூலமாயும், அஸ்திவாரமாயும் அமைந்து விடுகின்றது. இருமல், காசம், க்ஷயம், பீனிசம், ஆஸ்துமா போன்றவைகள் முதலில் ஜலதோஷத்தில்தான் ஆரம்பமாகும். ஆகையால் ஆரம்பத்திலேயே அதை ஒழிக்க வேண்டும்: தடுக்க வேண்டும். இத்தனைக்கும் மேலாக "வெள்ளம் வருவதற்கு முன் அணை போடுவதைப்" போல வராமல் தடுப்பதே உத்தமம். அப்பணியை முழுக்க முழுக்க சிரசாசனம் செய்கின்றது என்று சொன்னால் மிகையாகாது. முக்காலும் உண்மை.

முதலில் ஜலதோஷம் என்றால் என்ன? அது வருவது எப்படி? அதை எப்படித் தடுக்க முடியும்? என்பதைத் தெரிந்து கொண்டால் பிறகு சிரசாசனத்தினால் அதைத் தடுக்க முடியுமா என்று பார்க்கலாம்.

நமது வாயிலுள்ள உதடு முதல் மலத் துவாரம் வரை ஒரு குழாய் போல் ஆரம்பித்து முடிகின்றது. இது ஆகாரத்திற்காக ஏற்பட்டது. அதைப் போலவே மூக்கில் ஆரம்பித்து ஒரு குழாய் பெரிய கிளை போல உள்ளே சென்று இரண்டு பாகமாகப் பிரிந்து, இரண்டு நுரையீரல்களுக்குச் சென்று பல கிளைகளாகப் பிரிகின்றன. இது காற்றிற்காக ஏற்பட்ட காற்றுக் குழாய். நாக்கைச் சற்று மேலே உள்ளுக்கு மடித்துத் தடவிப் பாருங்கள். வழவழப்பாய்ச் சவ்வு போன்று இருக்கும். அதைப் போலவே இவ்விரு குழாய்களின் உள் வழிகளெல்லாம் வழவழப்பாய் மிருதுவாய்ச் சவ்வினால் ஆக்கப்பட்டிருக்கும். இச் சவ்வில் பல நுண்ணிய கிண்ணங்கள் போன்று சுரப்பிகள் உண்டு. அவைகளிலிருந்து ஒரு விதமான நீர் சுரந்து வரும். அது தான் வழவழப்பாய் இருப்பதற்குக் காரணம். நமது மேல் தோலில் எப்படி சிறு சிறு துவாரங்கள் இருக்கின்றனவோ அதைப் போல இங்கேயும் குழிகள் போன்று கிண்ணங்கள் இருக்கின்றன. மேல் தோலிலிருந்து வியர்வை போன்ற அழுக்கு கசிவது போல் இந்தச் சவ்வுக் கிண்ணிகளிலிருந்தும் ஒருவித நீர் கசிகின்றது. இச் சுரப்பிகள் தாக்குண்டால்தான் ஜலதோஷம் என்கிறோம்.

இச்சுரப்பிகள் பலவிதத்தில் தாக்கப்படலாம். உஷ்ணத்தினால் தாக்கப்படலாம். குளிர்ச்சியினால் தாக்கப்படலாம். தொத்து நோய்க் கிருமிகளாலும் தாக்கப்படலாம்.

அப்படித் தாக்கப்பட்டால் இக்குழாய் வழிகளிலுள்ள சவ்வு பாதிக்கப் படுகின்றது. அப்பொழுது அது அதிகமான நீரைச் சுரக்கின்றது. அதற்குத்தான் சாதாரணமாக ஜலதோஷம் என்கிறோம். இவை சாதாரண சீதோஷ்ண மாறுதலினால்கூட ஏற்படுவது உண்டு. அதற்குச் சரியான பாதுகாப்பு செய்து கொண்டால் தடுக்க முடியும். அதிகக் குளிராயிருந்தால் உடை காப்பளித்துத் தடுக்கலாம். ஆனால் சிரசாசனம் செய்பவர்களின் உடல், குளிரைத் தடுக்கச் சக்தி உடையவையாகையால் மற்றவர்களைப் போல அவ்வளவு உடை அதிகமாய்த் தேவையிருக்காது. சிலருக்கு உடைகள் அதிகம் அணிவதினாலேயே உஷ்ணத்தினால் ஜலதோஷம் பிடிக்கும். வெய்யில் கொளுத்தும். அப்



"ஏண்டாப்பா, உனக்கும் உங்க அண்ணாவுக்கும் சண்டை வந்து பாகம் கூடப் பிரித்துக் கொண்டு விட்டீர்களாமே!"

"ஆமாம், எனக்கு நிலமும் அண்ணாவுக்கு வீடுமாகப் பிரித்துக் கொண்டோம்!"

"ரொக்கமாக இருந்ததே அந்தப் பணம் என்ன ஆயிற்று?"

"அதை ஏன் கேட்கிறீர்கள்? பணத்தை வக்கீல்கள் பிரித்துக் கொண்டார்கள்!"

பொழுது இரண்டு மூன்று சட்டைகள் அணிவார்கள். காற்று வருவதற்கு முடியாமல் வியர்வை உடம்பிலேயே ஊறுவதினால் ஜலதோஷம் பிடிக்கும். ஆகையால் உடல் அதிக உஷ்ணமாகாமல் லேசான உடைதான் அணிய வேண்டும்.

தொத்து நோய்க் கிருமிகளால் தாக்குண்டால் அக்கிருமிகள் உட்சென்று விருத்தியாகும். அப்பொழுது சளியுடன் சீழ் கலந்து கட்டியாக வரும். மூக்கில் ஏற்பட்டால் மூக்கைச் சிந்த வேண்டியதாயிருக்கும். தொண்டையில் ஏற்பட்டால் கனைத்துத் துப்பவோ விழுங்கவோ செய்ய வேண்டும். நுரையீரலில் ஏற்பட்டால் சற்று அழுத்தி இருமினால்தான் வெளிவரும்.

சிலருக்கு இரத்தத்திலுள்ள அழுக்குகள், கழிவுப் பொருள்கள் சுத்தமாகாமல் அசுத்தமாயிருக்கும். அவைகளிலுள்ள அழுக்குகளை மேல் தோல் சருமத் துவாரங்கள் வெளித்தள்ள முயற்சிப்பதுபோல இந்தக் குழாய்களிலுள்ள சுரப்பிகளும் முயற்சிக்கும். அதனால் சளி உற்பத்தியாகிச் சதா வந்து கொண்டேயிருக்கும். இப்படித் தன்னைத் தானே சமாளிக்கக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது வெளித் தாக்குதலை எங்கே தாங்கப் போகிறது? எரிகிற தீயில் எண்ணெய் வார்த்தாற்போல தொத்து நோய்களுக்கு இரையாக வேண்டியதுதான்.

நாம் சாப்பிடும் உணவினாலும் இச்சவ்வு பாதிக்கப்படும். அதிக காரம், அதிக சூடான ஆகாரம், காபி, டீ, லாகிரி வஸ்துக்கள், கடுகு போன்ற வஸ்துக்களாலும் இக்குழாய்களிலுள்ள சவ்வுகள் தாக்கப்படும். இவைகள் தூண்டிவிடும் வஸ்துக்களானதினால் சவ்விலுள்ள சுரப்பிகள் தூண்டப்பட்டு அதிகச் சளியை உற்பத்தி செய்யும். சிலர் சளிக்கு, காபி, டீ, வெந்நீர் போன்றவை குடித்தால் சளி குறைந்து சாந்தியாக இருக்கிறதே என்று கூறலாம். ஆம்! அவைகள் அருந்தும் வழியில் இருக்கும் சளியை அறுத்தெடுத்து அத்துடன் குடலுக்குள் கொண்டு சென்று விடும். வழியிலிருக்கும் சளி சற்று அறுபட்டதால் சிறிது சுகமாகத் தென்படும். ஆனால் இதனுடைய வேகம் தணிந்ததும் முன்பைவிட அதிகச் சளி உற்பத்தியாகும். இதற்கென்று காபி, டீ போன்ற பானங்களை அடிக்கடி அருந்துவோரும் உண்டு. அது அவ்வளவுக்கும் கெடுதல்தான்.

இந்த ஜலதோஷத்திற்கும், சளி இருமலுக்கும் எத்தனையோ கணக்கில்லாத மருந்து வகைகள் இருக்கின்றன. ஐந்து நிமிஷத்தில் சளி கரையக் கூடியது முதல் ஒரே இரவில் இருமலைப் போக்கடிக்கக்கூடிய மருந்து விளம்பரங்கள் எத்தனையோ இருக்கின்றன. எல்லாவற்றிலும் தூண்டும் தன்மையைக் கொண்ட சக்தியே அதிகம் இருக்கும். நம் பாட்டி வைத்திய முறையை அநேகர் மறந்தே விட்டனர். சாதாரண ஜலதோஷம், இருமல் எல்லாம் மிளகு, சுக்கு, சித்தரத்தை போன்ற



வந்தவர் :— விளையாட்டாக ஒரு அரை ரூபாயை வாயில் போட்டுக் கொண்டு தவறி விழுங்கி விட்டேன்......உடனே......

டாக்டர் :— இப்பொழுது அவசரமா வெளியே போகிறேன். நீங்கள் ஆபீஸ் போய்விட்டு வரும்போது வாருங்கள். கவனிக்கிறேன்.

வந்தவர் :— அப்புறம் வருவதாவது? இப்பொழுது ஆபீஸ் போவதற்கு வேறு காசு இல்லையே, ஸார்!

கஷாயத்தினாலேயே சரி செய்து கொள்ளலாம். காலையில் பசும்பால் கறந்ததும் குடிப்பதில் எவ்வளவோ குணம் உண்டு. மருந்துகளுக்காகக் காசை வீணாய்ச் செலவு செய்ய வேண்டுமென்ற அவசியமும் இல்லை. புட்டி விளம்பர மருந்துகளில் சேர்ந்துள்ள ரசாயனப் பொருள்களைச் சற்றுக் கவனியுங்கள். அதில் சளியைக் கரைக்கக்கூடிய பொருள்கள் ஒன்றிரண்டிருக்கும். ஆனால் மற்றப்படி உடலை உறுதியாக்கத் தாதுப் பொருள்கள் - வைட்டமின்கள் நிறையச் சேர்ந்திருக்கும். அதிலிருந்து என்ன தெரிகிறது? வெறும் சளியை மட்டும் கரைத்தால் உபயோகமில்லை. மீண்டும் மீண்டும் சளி உற்பத்தியாகிக் கொண்டேயிருக்கும். ரத்தத்தைப் பலப்படுத்தி அதிலுள்ள அணுக்களை உறுதியாக்கி ரத்த சுத்தம் ஏற்பட்டால்தான் இம்மாதிரி சளி வருவது குறையும். பொதுவாய் நல்ல சக்தியுள்ள ரத்தமுள்ளவர்களுக்கு, ஆரோக்கிய ரத்தமுள்ளவர்களுக்கு இம்மாதிரியான அற்பமான ஜலதோஷம், இருமல் முதலியன வராது. வந்தாலும் மிக லேசாய் வந்து போய் விடும். மருந்தே தேவையில்லை.

என்றும், எப்பொழுதும், ரத்தம் சுத்தமாய் இருக்க, ஆரோக்கியமாயிருக்க, நரம்புகள் தெம்புடன் இருக்க நரம்பிலுள்ள சவ்வு சுரப்பிகள் நல்ல நிலைமையில் இருக்க வேண்டியது மிக்க அவசியம். அதை இந்தச் சிரசாசனம் செய்கின்றது. சிரசாசனம் செய்பவர்களுக்குச் சிரசிலுள்ள எந்த பாகத்துக்கும் கஷ்டம் உண்டாகாது. ஜலதோஷம் போன்றவை சாதாரணமாய் ஏற்படாது. சிரசாசனம் செய்

பவர்களின் உடலில் ரத்த ஓட்டம் சுத்தமாயிருக்கும். அசுத்தங்களை அவ்வப்போது பிட்யூடரியானது தனது சக்தியைக் கொண்டு அப்புறப்படுத்தி விடுகின்றது. சீதோஷ்ண நிலையைச் சமன் படுத்திக் கொள்ளும் சக்தி இரத்தத்துக்கு உண்டாகும்.

இதற்கு நாடி சுத்தியும் துணை செய்கிறது. ஆசனம் செய்பவர்கள், நாடி சுத்தியும் கூடச் செய்ய வேண்டுமென்று முன்பே சொல்லப் பட்டிருக்கிறது. நாடி சுத்தி செய்பவர்களின் காற்றுக் குழாய், கிளைக் காற்றுக் குழாய்கள், பூராவும் எப்பொழுதும் சுத்தமாயிருக்கும். எப்பேர்ப்பட்ட ஜலதோஷ இருமலையும் நாடி சுத்தியைத் தீவிரமாகச் செய்தால், சில நாட்களிலேயே ஓட்டி விடலாம். பிராண வாயு சகல துன்பங்களையும் ஒழித்து இதமளிக்கும். ரத்தத்தில் பிராண வாயு நன்ருய்க் கலப்பதால் ரத்த சுத்தி நன்ருய் ஏற்படும். பிராண சக்தி இருப்பதால் எதையும் எதிர்த்துப் போராடி வெல்லும் திறன் உண்டாகும். ஆகையால் நாடி சுத்தியையும் ஆசனம் செய்துவரும் நண்பர்கள் செய்ய வேண்டியது மிக மிக அவசியம்.

ஜலதோஷத்தினால் சிலருக்குக் காதுவலியும் வருகிறது என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? மேல் தொண்டையிலிருந்து காதுக்கு இரண்டு குழாய்கள் செல்லுகின்றன. அவை மூக்குத் துவாரங்களின் பின்புறமாக வந்து காதுக்குள்ளே செல்லுகின்றன. அங்குதான் காற்று அமுக்கம் ஏற்படுகின்றது என்று காதைப் பற்றிச் சொல்லிய அத்தியாயத்தில் முன் சொன்னோம். ஜலதோஷம் பிடித்து, சளி கட்டி கட்டியாக வர ஆரம்பிக்கும் சமயத்தில் சிலர் பலமாக மூக்கைச் சிந்துவார்கள். அப்படிச் சிந்தினால் தொண்டையிலே வாயு அமுக்கம் ஏற்பட்டு அங்கேயிருக்கும் கிருமி நிறைந்த சளி காதுக் குழல்களின் வழியாக காதுக்குள்ளே போகும். அங்கிருந்து அந்தச் சளியானது நோயை உண்டாக்கிக் காதை வலிக்கச்செய்யும். சீழ் வரும். அதனால் தான் பலமாக மூக்கைச் சிந்தக் கூடாது என்பது. அதற்குப் பதில் சளியைத் தொண்டையைக் கனைத்துக் கொஞ்சம் உள்ளுக்கு உறிஞ்சிக் காறி உமிழ்ந்துவிட வேண்டும்.

சிலர் மூக்கைச் சுரண்டிக் கொண்டிருப்பார்கள். சிலர் மூக்கில் வளர்ந்திருக்கும் மயிர்களைப் பிடுங்குவார்கள். கத்தரித்தும் விடுவார்கள். இம்மாதிரி செய்வது சுத்தத் தவறான காரியம். மூக்கை நமக்கு இத்தனை நீளம் வைத்து அதையும் இரண்டு துவாரங்களாக்கி அந்த துவாரங்களில் சிறு சிறு மயிர்களை இயற்கை உண்டாக்கியது எதற்கு? மூக்கில்லாமலே நாம் பிறந்திருக்கக் கூடாதா? அப்படி மூக்கில்லாத எத்தனையோ மூக்கறையர்களும் ஜீவிக்கத்தானே செய்கின்றார்கள்? இயற்கை எதையும் அனாவசியமாகச் செய்யவில்லை. மூக்கை நீளமாக வைத்து அதன் வழிகளிலே சிறு சிறு மயிர்களை உண்டாக்கியது காற்றை வடிக்கட்டவே. காற்றிலுள்ள தூசி, தும்புகள் அதில் தங்கிவிடும். மற்றும் மூக்குத் துவாரத்துக்குள் எண்ணிறந்த சுரப்பிகளிலிருந்து வரும் பிசு பிசுப்பில் தூசிகள், கிருமிகள் ஒட்டிக் கொள்ளும். அதை முகம் கழுவும்போது கழுவி விட்டால் சுத்தமாய்ப் போய்விடும். அப்படிச் செய்யாமல் மயிர்களை எடுத்துவிட்டால் காற்று வடி கட்டப்படாமல் அப்படியே உள்ளே சென்று பல வியாதிகளை உண்டாக்கும். தவிர மயிர் பிடுங்கப்பட்டால் அந்த மயிர்க்கால்களின் வழியாகக் கூட கிருமிகள் நுழைந்து சிறு கட்டிகளை யுண்டாக்கும். இதன் மூலம் மூளைக்கும், கிருமிகள் நுழைந்து மூளையில் கட்டி வந்து கஷ்டப்பட்டவர்களும் உண்டு. ஆகையால் எப்பொழுதும் மூக்கைச் சுரண்டவோ, கிள்ளவோ, மயிர்களை எடுக்கவோ கூடாது.

எனவே, இம்மாதிரி பொது விதிகளை அனுசரித்து அதனுடன் சிரசாசனத்தையும், நாடி சுத்தியையும் எல்லோரும் பழகி வருவார்களானால், ஜலதோஷத்திற்கும் பீனிசத்திற்கும் இருமலுக்கும் மற்றும் நுரை ஈரலில் உண்டாகும் தொத்து நோய்களுக்கும் பயப்பட வேண்டியதில்லை. இம்மாதிரி நோய் உள்ளவர்கள் சிரசாசனம், நாடி சுத்தியைச் செய்து சுகமடையலாம். மற்றும் புஜங்காசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம் முதலியனவும் இதற்குத் துணை புரியும். (தொடரும்)



இன்ஸ்பெக்டர்:—இந்த ஆசாமி செய்த குற்றம் என்ன? சீக்கிரம் சொல்லு!

கான்ஸ்டபிள்:—ரொம்பவும் சந்தேகப் படும்படியான நடத்தைதான் ஸார்!

இன்ஸ்பெக்டர்:—சந்தேகப் படும்படியாக இவர் செய்த காரியம் என்ன?

கான்ஸ்டபிள்:—இவர் ஒரு காரை ஓட்டிக் கொண்டு போனார். வேகத்திலும் அளவு மீறிப் போகவில்லை. ஹார்ன் அடிக்காமலும் போகவில்லை; ரோட்டுத் திருப்பங்களில் ஞாபகமாகக் கை காட்டினார்! இப்படி எல்லாம் ஒவ்வொரு காரியத்திலும் சரியா யிருக்கவே எனக்கு இவர் மீது சந்தேகமாய்ப் போய் விட்டது.

# உறுதியான எதிர்ப்பு சக்தி





நீங்களும் பெறுக

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்




வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதன் மூலம் தேக வலிமையைப்பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் எந்த நோயும் வராமல் தடுக்கும் சக்தியை பெறுவீர்கள். நிரூபிக்கப்பட்ட குணம் பொருந்திய இந்த டானிக்கில் போஷாக்கு அளிக்கும் அம்சங்கள் ஏராளமாக இருப்பதால், உங்களுக்கு உபரியாக தேவையாயிருக்கும் உறுதியான எதிர்ப்பு சக்தியை உண்டாக்கும்.

குழந்தைகளுக்கு உடல் வலியும் ஆரோக்யமும் அதிகரிக்க உதவுவதிலும் பிரசித்திபெற்றுள்ள இந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்டு சாப்பிட ருசியானதாக்கூட. இன்றே வாங்குங்கள்.

**WATERBURY'S**

**COMPOUND**

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

உங்களைத் திடனுடன் வைத்திருக்கும்

NAS. 742



# அவளுக்கு தெரியும்

வெகு சூடிகை அவள். மாலை சோர்வுடன் வீடு திரும்பும் கணவனை புது மனிதனாக்கும் மந்திரம் அவளுக்கு தெரியாததா! அவர் சட்டையை கழற்றுவதற்குள் அவள் ஒரு டம்ளர் 'டீ' போட்டுக் கொண்டு வந்து விடுகிறாள்.

'இந்தாருங்கள்! முதலில் 'டீ'யைக் குடியுங்கள். ஆறி விடப் போகிறது' என்று அன்புடன் அதிகாரமல்லவா செய்கிறாள் அவள்!

அவருக்கு பிடித்தமாக இருக்க 'டீ'யில் இன்ன அளவு சர்க்கரை பால் சேர்க்க வேண்டும், இன்ன சூட்டில் 'டீ' இருக்க வேண்டும் என்பதை அவளைப் போல் ஒவ்வொரு நல்ல மனைவியும் அறிவாள்.

*[ஒரே நொடியில், அதிக சிரமமில்லாது தயாரிக்கக் கூடிய சிக்கனமான பானம் 'டீ' தான் என்பதை சொல்லவும் வேண்டுமா!]*

**மந்திர சக்தியுள்ள**

**'டீ'யைக் குடியுங்கள்.**



சென்ட்ரல் டீ போர்டாரால் வெளியிடப்பட்டது.

C.T.B. 67

# பொல்லாத ப்ரத்யக்ஷம்



வி. எஸ். ஆர்.

எங்கள் ஊர் சின்னஞ் சிறு கிராமம். பக்கத்தில் காவேரி ஆறு. ஆடி மாதம் கரை புரண்டு செல்லும். மரம் செடி கொடிகள் பூத்துக் குலுங்க, ஜில்லென்ற மேலக் காற்று வீச, குயில்கள், வானம்பாடிகள் மரக் கிளைகளில் பாடுவதை மெய்மறந்து கேட்பேன்.

எனக்குத்தான் வேறு என்ன வேலை? எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறிவிட்டு நான் வேலைகளுக்கு மனுப் போட்டுக் கொண்டிருந்தேன். மனுக்கள் எழுதுவது, தபாலாபீசுக்குப் போய் யாரிடமிருந்தாவது பதிலை எதிர்பார்ப்பதும்தான் என் வேலை.

வேலையற்றுத் தவிக்கும் என் மன வேதனை காவேரிக் கரையைக் கண்டதும் மறையும்.

பட்டண வாசியாக நான் இருந்திருந்தால் வேலை தேடிக் கொள்வதற்கு எனக்கு அதிக வாய்ப்புக் கிடைத்திருக்கும் என்று நான் நினைப்பது உண்டு. ஆயினும், என் கிராமமான மணியூரைப் பற்றி எனக்குப் பெருமைதான்! நான் கஷ்டப்பட்டால் என்ன மோசம்? உலகத்தில் எல்லோரும் தான் கஷ்டப்படுகிறார்கள். ஆனால் திவான் பகதூர் சேஷாசலம் பிறந்து வளர்ந்த மணியூரில் அல்லவா, நான் வேலையின்றித் திண்டாடுகிறேன்! இரண்டு ஹைகோர்ட் ஜட்ஜுகள் பிறந்த இடமான எங்கள் மணியூரின் பெருமை சாமான்யமானதா?

வழக்கம் போல் ஒரு நாள் போஸ்டாபீஸுக்குப் போய் எனக்கு ஏதாவது தபால் இருக்கிறதா என்று பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன்.

எங்கள் ஊர் சிவன் கோவில் வாசலில் வழக்கமாக நிற்காமல் செல்லும் பஸ் நின்றது. அதிலிருந்து ஒரு பாட்டி அம்மாள் டிரங்குப் பெட்டிகள் சகிதம் வந்து இறங்கினாள். பெட்டிகள் நான்கு, தகர டின் மூன்று, ஒரு கூஜா, ஒரு அரிக்கன் விளக்கு, தாழங்கூடை ஒன்று, படுக்கை ஒன்று, ஆக பாட்டியையும் சேர்த்துப் பன்னிரண்டு சாமான்கள் இறங்குவதைக் கணக்கிட்டேன். மோட்டாரும் கிளம்பிப் புழுதியை எழுப்பிக் கொண்டு மறைந்தது.

எதிரில் வந்த என்னைப் பார்த்து பாட்டி, "ஏண்டாப்பா! திவான்பகதூர் சேஷாசலம் வீடு உனக்குத் தெரியுமோ?" என்றாள். நான் ஆச்சரியத்துடன் அந்தப் பாட்டியை ஏற இறங்கப் பார்த்தேன். பத்து வருஷங்களுக்கு முன் இறந்து போன திவான்பகதூரைத் தேடிக் கொண்டு ஒருவர் வருவதாக இருந்தால் யார்தான் ஆச்சரியப்பட மாட்டார்கள்?

"அவர்கள் வீட்டில் யாருமே இல்லையே!" என்று சொன்னேன்.

"அது எனக்குத் தெரியும். அந்த வீட்டைக் காண்பிக்கிறாயா?" என்று கேட்டாள்.

பக்கத்தில் வந்த இரண்டு ஆட்களைக் கொண்டு நான் சேஷாசலம் வீட்டை நோக்கி நடந்தேன். அந்த வீடு பழைய காலத்து வீடு. கிட்டத்தட்ட இடிந்த நிலைமையில் இருந்தது. எனக்கு விவரம் தெரிந்ததிலிருந்து அந்த வீடு பாழாகவே இருந்தது.

"இந்த வீடா? இதுவா சேஷாசலம் வீடு?" என்று திகைப்புடன் கேட்டாள் பாட்டி.

"ஆமாம், இதேதான். இந்த வீட்டுக்கு நீங்கள் வந்ததில்லையா?" என்றேன் நான்.

"இல்லை!"

"இதன் சொந்தக்காரர் சேஷாசலத்தை உங்களுக்குத் தெரியுமா?" என்றேன் சற்று சந்தேகத்துடன். "சரிதான் போ! அவர் சம்சாரம் தான் நான்!"

"அடாடா! மன்னிக்க வேண்டும்!"

பாட்டி சில நிமிஷங்களில் பூட்டைத் திறந்து வராந்தா அறையைப் பெருக்கித் துப்புரவு செய்து விட்டாள்.

"இரண்டே நாளில் இந்த இடத்தை எப்படிச் செய்கிறேன், பார்!" என்றாள். அவளது சுறுசுறுப்பைப் பார்த்ததும் கட்டாயம் சொன்னபடி செய்து விடுவாள் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. பாட்டிக்குச் சில சௌகரியங்கள் செய்து கொடுத்துவிட்டு வீடு திரும்பினேன். பாட்டியின் விஜயம் சில நிமிஷங்களில் ஊரெங்கும் பரவிவிட்டது.

* * *

சேஷாசலம் எங்கள் ஊரில் சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவர். வாலிப வயதில் அவர் கல்கத்தாவுக்கு வேலை தேடிச் சென்றார். ஓயாத உழைப்பின் பலனாக முன்னுக்கு வந்தார். வியாபாரத்தில் ஈடுபட்டு உழைத்துப் பல லக்ஷக்கணக்கான ரூபாய்கள் சேர்த்து விட்டார். எப்பொழுதாவது ஒரு சமயம் அவர் கிராமத்துக்கு வருவது உண்டு. அப்படி ஒரு சமயம் வந்தபோது தான் தம் வீட்டை இடித்து அழகான

பெரிய வீடாகக் கட்டினார். அதற்குப் பிறகு அவர் கிராமத்துப் பக்கம் வருவதே இல்லை. அவர் திவான்பகதூர் பட்டம் பெற்றுப் புகழின் உச்சியைத் தொட்டபோது, மணியூர் வாசிகள் யாவரும் பெருமையினால் உள்ளம் பூரித்துப் போனார்கள்.

கடைசியில் திவான்பகதூர் சேஷாசலம் கல்கத்தாவில் காலமான போது அகில இந்தியப் பத்திரிகைகள் அவருக்குப் புகழ்மாலை சாத்தின. நான் சிறு பையனாக முதல் பாரம் வாசித்துக் கொண்டிருந்தேன். அச்செய்தியைப் படித்துவிட்டு மணியூர் வாசியாகிய நானும் ஒரு சொட்டுக் கண்ணீர் வடித்தேன்.

திவான்பகதூரின் உறவினர்கள் யாரும் கிராமத்துப் பக்கம் எட்டிப் பார்க்காமல் போகவே, அந்தப் பழைய பெரிய வீடு கவனிப்பாரற்றுப் பாழாகவே கிடந்தது.

திவான்பகதூர் காலமாகி இத்தனை வருஷம் கழித்து அவர் மனைவி கிராமத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்ததில் எனக்குச் சந்தோஷம் தான். இனிமேல் அந்த வீடு புத்துயிரை அடையும். அது எங்கள் ஊருக்குத் தனிச் சிறப்பைக் கொடுக்கும் அல்லவா?



* * *

ஸ்ரீமதி சேஷாசலம் ஊருக்கு வந்த செய்தியை என் தாயாரிடம் சொன்னதும், "சேஷாசலம் சம்சாரமா? மூத்தவளா? இளையவளா?" என்று கேட்டாள்.

"திவான்பகதூர் சேஷாசலத்துக்கு இரண்டு பெண்டாட்டியா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன். எனக்கு இந்த விஷயம் அதுவரையில் தெரியாது.

"ஆமாம் அப்பா, ஆமாம். அவருக்கு இரண்டு தாரம்தான்" என்றாள் அம்மா.

"ஆனால் அந்தப் பாட்டியைப் பற்றித் தெரிந்துகொள்ள ஏனோ என் உள்ளம் விரும்பியது. அந்தப் பாட்டியிடம் எனக்கு ஒரு பாசம் ஏற்பட்டது உண்மைதான். தினமும் பாட்டியைப் பார்க்கச் செல்வேன். என்னால் முடிந்த உதவிகளைச் செய்வேன். அவளும் என்னை அன்புடன் உபசரித்துத்தான் செய்யும் பலகாரங்களை எனக்கு அளித்துச் சாப்பிடச் சொல்லுவாள். ஊரார் திவான் பகதூரின் மனைவிமார்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தார்களே ஒழிய யாரையும் பார்த்ததில்லை. ஆகையால் இந்தப் பாட்டி மூத்தவளா, அல்லது இளையவளா என்பது தெரியவில்லை.

கிராமத்துப் பெண்மணிகள் பாட்டியுடன் பேச வருவார்கள். ஆனால் அவள் யாருடனும் பேசுவதில்லை. யாராவது பேச வந்தால் சட்டென்று உள்ளே போய் விடுவாள்.

அவளது சாந்த முகத்தில் அடிக்கடி வேதனையும் ஏக்கமும் தோன்றுவதை நான் கவனித்தேன். அது கணவனை இழந்த துக்கமாகத் தானிருக்க வேண்டும். அவள் அடிக்கடி பெருமூச்செறிவது கடந்துபோன இன்ப நாட்களை நினைத்துத் தானிருக்கவேண்டும்.

என் தாய் மாமன் மீனாட்சிசுந்தரம் பம்பாயில் ரயில்வேயில் சாதாரண உத்தியோகத்தில் இருந்து வந்தார். அவரும் எனக்கு வேலை தேடிக்கொடுக்க முயற்சி செய்து கொண்டிருந்தார். அவருக்கு அடிக்கடி கடிதம் எழுதுவதும் அவர் பதிலை ஆவலுடன் எதிர்பார்ப்பதும் வழக்கம். பாட்டி விஷயத்தைப்பற்றிக் குறிப்பிட்டு, ஒரு கடிதத்தில் எழுதினேன். அவர் பதிலில் பின்வருமாறு எனக்கு எழுதியிருந்தார்!

"...நீ எழுதியிருக்கும் விவரங்களிலிருந்து அவள் சேஷாசலத்தின் மூத்த சம்சாரம் அலமு என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

சேஷாசலம் பத்து வருடங்கள் சந்தோஷமாக குடும்ப வாழ்க்கை நடத்தினார். அதற்குப் பிறகு தான் அவர் வாழ்க்கையில் பெரிய பிசகைச் செய்தார். குழந்தை இல்லை என்று மறு விவாகம் செய்துகொண்டார். பங்கஜம் வீட்டிற்கு வந்ததும் குடும்பத்தின் பொல்லாத வேளை ஆரம்பித்தது. குழந்தை பிறப்பதற்குப் பதில் கலகமும் கசப்பும் பிறந்தது. பங்கஜம் முன் கோபி. அதிகாரக்காரி. எடுத்ததற்கெல்லாம் அலமுவைச் சண்டை பிடிப்பாள். அவள் பொல்லாத்தனத்தை அறியாத கல்கத்தாத் தமிழர்கள் யாரும் இருக்க முடியாது. அலமு அவ்வளவு கஷ்டங்களையும் தன் கணவனை உத்தேசித்துப் பொறுத்துக் கொண்டாள். வீட்டில் நடக்கும் ரகளைகளை அவள் புருஷனிடம் கூடத் தெரிவிக்க மாட்டாள்.

ஆனால் ஊர் வாயை மூட முடியுமா? வீட்டில் நடக்கும் ரகளைகள் திவான்பகதூருக்குத் தெரிய வந்தன. வெளி வாழ்க்கையில் வெற்றி பெற்று வந்த அவர் குடும்ப வாழ்க்கையில் வெற்றி பெற முடியவில்லை. மூத்த மனைவியின் கஷ்டத்தை உணர்ந்தார். அலமுவுக்காகப் பரிந்து பங்கஜத்திடம் பேசும்பொழுது, பங்கஜம் விசுவரூபம் எடுத்து விடுவாள்.

இந்தக் கஷ்டத்துக்கு முடிவு என்ன என்கிறாயா? கணவனின் மன அமைதிக்காக அலமு தன் வாழ்க்கையைத் தியாகம் செய்து கொண்டாள். ஒருநாள் தன் கணவனுக்குத் தான் தற்கொலை செய்து கொள்ளப் போவதாகவும் தன்னைத் தேடவேண்டாம் என்றும் ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு மறைந்து போய்விட்டாள்.

திவான்பகதூர் அந்தக் கடிதத்தைப் பார்த்துத் துடி துடித்துப் போனார். அலமு போன பிறகும் பங்கஜத்துக்கும் அவருக்கும் மனக்கசப்பு அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. பங்கஜத்தின் கோபத்தை ஏகபோக உரிமையுடன் முன்பு அலமு தாங்கிக் கொண்டாள். இப்பொழுது அந்த உரிமை திவான்பகதூருக்குக் கிடைத்தது. சிலகாலம் கழித்து அலமு எங்கேயோ உயிருடன் இருக்கிறாள் என்பதைக் கேள்விப்பட்டதும் திவான்பகதூர் சற்றே மன ஆறுதல் அடைந்தார். இறக்குமுன் அவர் எழுதிய உயிலில் தம் சொத்தை இரு தாரங்களுக்கும் சமமாகப் பங்கிட்டுப் போனதாக வதந்தி. அலமுவுக்கே கிராமத்து

விட்டை எழுதி வைத்து விட்டதாகவும் கேள்விப் படுகிறேன். புண்பட்ட மனதுடன் வந்திருக்கும் அலமு மணியூரில் கட்டாயம் அமைதியைக் காண்பாள் என்பதில் சந்தேகமில்லை...''

பாட்டியிடம் எனக்கு ஏற்கனவே உண்டான அனுதாபமும் பாசமும் மாமா கடிதத்தைப் பார்த்ததும் பன்மடங்கு அதிகமாயின. இந்தக் கடிதத்தைப் பற்றி அம்மாவிடமும் பிரஸ்தாபித்தேன். "ஐயோ பாவம்!" என்று அனுதாபப்பட்டாள் அம்மா.

அன்று மாலை பாட்டியின் வீட்டுக்குப் போனேன். ஒரு மூலையில் இருந்த ஓட்டடையைப் பாட்டி தட்டிக் கொண்டிருந்தாள். "அம்பி! இந்த டிரங்குப் பெட்டியைக் கொஞ்சம் தூக்கிப் பெஞ்சியின் மேல் வைக்கிறாயா? இந்த இடத்தைப் பெருக்கி விடுகிறேன்" என்றாள். நான் அந்த டிரங்குப் பெட்டியைத் தூக்கப் போனதும் "அலமு" என்று அதன் மீது எழுதப்பட்டிருந்ததைப் பார்த்தேன். மாமாவின் கடிதம் ஞாபகம் வந்து உணர்ச்சி வசமானேன். தியாகத்தின் உருவாகவும் பொறுமையின் இருப்பிடமுமான அந்தப் பாட்டியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன்.



"பாட்டி! உங்கள் பெயர் அலமு. கண்டு பிடித்து விட்டேன்!" என்று கூறினேன்.

"பெட்டியில் பெயரைப் பார்த்திருப்பாய்!" என்று சிரித்தவாறு பதில் சொன்னாள் பாட்டி.

அலமுவின் தியாக வாழ்வைப் பற்றிய செய்தி என் தாயார் மூலமாக ஊரெங்கும் பரவி விட்டது. "ஐயோ பாவம்!" என்று சொல்லி அனுதாபப்படாதவர்கள் யாரும் இல்லை.

நான் வேலையில்லாமல் கஷ்டப்படுகிறேன் என்று பாட்டிக்குத் தெரிந்ததும், "அம்பி! உனக்கு உதவி தேவையான போது சங்கோஜப் படாமல் கேள்! எனக்குப் பிள்ளையா, குட்டியா? யாருக்குச் சேர்த்து வைக்க வேண்டும்?" என்பாள். "பாட்டி! உங்களுக்கு வேண்டிய சொந்தக்காரர்கள் யாரும் இல்லையா?" என்று கேட்டேன்.

"என் உறவினர்கள் முகத்திலேயே நான் விழிப்பதில்லை. இந்தக் கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் அவர்கள்தானே?" என்று கூறிப் பெருமூச்செறிந்தாள் பாட்டி.

"உங்கள் உறவினர்கள் திவான் பகதூரின் செல்வத்திற்காக உங்களைப் பலி கொடுத்தார்கள். சுயநலவாதிகள், பேராசைப் பிடித்த துரோகிகள்!" என்றேன்.

"அவர்களை ஏன் கோபித்துக் கொள்கிறாய்? என் தலை விதி!" என்றாள் பாட்டி.

"உங்களுக்கு உங்கள் உறவினர்கள் பேரில் கோபம் ஏன் வரவில்லை? ஆனால் உங்கள் பொறுமையும் தியாகமும் எல்லோருக்கும் வருமா? உங்களைத் தவிர வேறு யாராவது உங்கள் நிலைமையில் இருந்தால் அந்தப் பங்கஜத்தைச் சும்மா விட்டிருக்க மாட்டார்கள். அவள் கொடுமைகளையும் ஏச்சுக்களையும் சகித்துக் கொண்டு எப்படி உங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்து கொண்டீர்களோ?" என்றேன்.

பாட்டி என்னை வியப்புடன் பார்த்தாள். சாந்தமான அவள் முகத்தில் வருத்தக் குறி தோன்றியது. "அம்பி! உனக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது? எனக்கென்னவோ பங்கஜம் பொல்லாதவள்தான். ஆனால் பங்கஜத்தின் மனதில் கொந்தளித்துக் கொண்டிருந்த எண்ணங்களை யார் கண்டது? அவள் என்னை வெறுக்க நியாயமான காரணம் இருந்திருக்குமோ என்னவோ? என் குறைபாடுகள் எனக்குத் தெரியுமா? அவளை வீணில் திட்டாதே!" என்று சொன்னாள்.

பாட்டியின் பதில் என்னைத் திகைக்கச் செய்து விட்டது. "உங்களைப் போல் வேறு யாராலும் பெருந்தன்மையுடன் நடந்து கொள்ள முடியாது!" என்றேன்.

"எந்தப் பெண்ணும் கணவன் ஏகபோகமான அன்பை அடைய விரும்புகிறாள். அதற்குப் போட்டியாக வரும் யாரையும் அவர்கள் எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும் சரி அவள் வெறுக்கிறாள். ஏழ்மையினாலே பங்கஜம் என் கணவரை இரண்டாந் தாரமாகக் கல்யாணம் செய்து கொண்டாள். புக்ககம் வந்ததும் கணவன் அன்பைப் பகிர்ந்து கொள்ள நான் ஏற்கெனவே ஒருத்தி இருக்கிறேன் என்பதை அறிந்ததும் நியாயமாக என்மேல் வெறுப்பைக் காண்பித்தாள். பாவம், வெறுப்பை வெல்ல அவளால் முடியவில்லை. பங்கஜத்தின் பேரில் ஏன் குற்றம் சொல்லுகிறாய்? அவள் நல்லவள்தான்."

அலமுவுக்குத்தான் என்ன பெருந்தன்மை! எதிரிகளுக்கு விட்டுக் கொடுக்கும் தாராள மனம்!—என்று எண்ணி என்னால் வியக்காமல் இருக்க முடியவில்லை.

மாதங்கள் ஓடிக் கொண்டிருந்தன. ஒரு நாள் அலமுவுக்குத் திடீர் என்று காய்ச்சல் வந்தது. நான்தான் அருகில் இருந்து வேண்டியதைக் கவனித்தேன். பதினைந்து நாட்கள் காய்ச்சல் அடித்தது. அன்று டாக்டர் கையை விரித்து விட்டார். என் கண்களில் நீர் மல்










யது. ஊரார் பலரும் உள்ளே கூடி விட்டனர். "இந்த அம்மாளுக்குச் சொந்தக்காரர் யாராவது இருந்தால் சொல்லியனுப்புங்கள்" என்றார் டாக்டர். நான் பாட்டியிடம் சென்று அவள் காதில் விழும்படி இதைச்சொன்னேன்.

அவளது விருப்பத்துக்கு இணங்க அங்கு கூடியிருந்த எல்லோரும் அறையை விட்டு வெளியே போய் விட்டார்கள்.

"அம்பி! நீ எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்!" என்றாள் பாட்டி.

"எது வேண்டுமானாலும் செய்கிறேன்!" என்றேன் துயரத்தோடு.

"என் டிரங்குப் பெட்டியில் அலமுவின் விலாசம் இருக்கிறது. அவள் விலாசத்துக்கு உடனே ஒரு தந்தி கொடு! அவளிடம் கடைசியாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு என் உயிரை விடுகிறேன்!" என்றாள் பாட்டி.

"ஆ! என்ன? அப்படியானால் நீங்கள் பங்கஜமா?" என்றேன் திடுக்கிட்டு.

"ஆமாம்!"

"இந்தப் பெரிய டிரங்குப் பெட்டியில்கூட 'அலமு' என்று எழுதியிருக்கிறதே!"

"அவள் வீட்டை விட்டுப் போகுமுன் அவள் பெட்டியைக் கூட நான் பிடுங்கி வைத்துக் கொண்டேன்" என்றாள். அப்பொழுது அவள் கண்களில் நீர் தாரை தாரையாக பெருகி வழிந்தது.

"நான் சொல்வதை நீ கேட்க மாட்டாயா?"

"இதோ போய் அலமுவுக்குத் தந்தி கொடுக்கிறேன்!" என்று கூறிச் சைக்கிளை எடுத்துக் கொண்டு விரைந்து சென்றேன்.

**ம**றுநாள் அலமுவும் வந்தாள். சேஷாசலத்தின் முதல் மனைவியும் தியாகத்தின் சிகரமான அவளை எல்லாரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். மணியூரே அமர்க்களப்பட்டது.

"சீ! இவள் இளையவளா?" என்று நோயாளியைப் பார்த்து ஊரே இகழ்ந்தது. "நம்மை ஏமாற்றிக் கொண்டல்லவா இத்தனை நாள் இருந்தாள்?" என்று ஏசாதவர்கள் இல்லை.

அலமுவின் முயற்சியின் பேரில் அவள் கேட்டுக் கொண்டதனால் மேலே நடக்க வேண்டிய காரியங்கள் நடந்து முடிந்தன.

பாட்டியின் மறைவைப் பற்றி நினைக்கும் போது, இப்பொழுதும் என் கண்களில் நீர் நிறைகிறது. ஊருக்குப் பங்கஜம் பொல்லாதவள். அலமுவின் ஜன்ம விரோதி. அவள் அலமுவுக்குச் செய்த கொடுமைகளுக்குப் பிராயச்சித்தமாக கிராமத்தில் தூய வாழ்வு நடத்தியவள். ஆயினும் பாட்டி பங்கஜம் அன்று சொன்ன பின் வரும் வார்த்தைகளை என்னால் எப்படி மறக்க முடியும்?

"எந்தப் பெண்ணும் கணவனின் ஏகபோக அன்பை அடைய விரும்புகிறாள். அவளுக்குப் போட்டியாக இருக்கும் யாரையும் வெறுக்கிறாள். இந்த வெறுப்பை வெல்ல அவளால் முடியவில்லை. அப்பாவிப் பெண் பங்கஜத்தின் பேரில் ஏன் குற்றம் சொல்லுகிறாய்?"

# மருமகள் லக்ஷ்மி

சரோஜா ஸ்ரீனிவாசன்

கொல்லைப்புறத்துக் கிணற்றடியில் வெங்கலத் தவலையைத் தேய்த்துக் கொண்டிருந்தாள் லக்ஷ்மி. அவள் தவலையைத் தேய்த்துக் கொண்டிருந்தாளே ஒழிய, மனம் எங்கெங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது. தான் தன் அம்மாவுடன் அந்த வீட்டில் ஏழு வயதில் காலடி வைத்து நுழைந்த போது இருந்த நிலையிலிருந்து பதினேழு வயதை அடைந்த இன்றைய நிலைமை வரை தன் பத்து வருஷ வாழ்வை அவள் மனம் படம் பிடித்துக் கொண்டிருந்தது. அவளை அறியாமல் அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று.

தொப்பென்று ஏதோ கையிலே விழுந்தது.

திடுக்கிட்டு அண்ணாந்து பார்த்தாள் லக்ஷ்மி. தென்னை மரத்திலிருந்து காய்ந்த குரும்பை ஒன்று அவள் கையிலே விழுந்து தெறித்தோடியது.

அவசர அவசரமாகக் கைகளை அலம்பிக்கொண்டு தவலையை அலம்ப ஆரம்பித்தாள். கை, காரியத்தைச் செய்தாலும் மனம் அதில் ஈடுபடாததால் காரியத்தின் கவனக் குறைவைத் தவலை எடுத்துக் காட்டியது. தவலை நன்றாகவே வெளுக்கவில்லை. இன்னொரு தடவை தவலையைத் தேய்க்கக் கஷ்டமாயிருந்தது லக்ஷ்மிக்கு. பசிவேறு வயிற்றைக் கிள்ளியது. ஆனால் மாமியின் கொடுமை நிறைந்த முகம் ஒரு கணம் அவள் மனக் கண்முன் தோன்றியது. 'தவலையைக் கரிபோகப் பளபளன்னு தேய்த்து வைக்காவிட்டால் இன்னிக்கு உனக்குச் சோறு கிடையாது' என்று அதிகாரத்துடன் சொல்லி விட்டுப் போன மாமியின் வார்த்தைகள் அவள் காதில் ஒலித்துக் கொண்டே யிருந்தன.

புளியைத் தடவிச் செங்கல் பொடியை வைத்துக் கொண்டு மறுபடியும் தவலையை அழுத்தித் தேய்க்க ஆரம்பித்தாள் லக்ஷ்மி. அவள் உள்ளம் ஜுரத்தினால் மூக்கை முனகியபடி படுத்துக் கொண்டிருந்த அம்மாளையே சுற்றி வட்டமிட்டது.

" ஏண்டி! இந்தத் தவலையைத் தேய்க்கவா இத்தனை காழி! ஒரு காரியம் செய்யத் துப்பில்லை. வாய்மட்டும் கிழியறதே! உங்க இரண்டு பேரையும் ஒழித்துவிட்டு என்னிக்குத்தான் நிம்மதியாயிருக்கப் போகிறேனோ தெரிய வில்லை" என்று அதிகாரக் குரலில் சொல்லிக் கொண்டே கொல்லை வாசற்படியில் வந்து நின்றாள் லக்ஷ்மியின் மாமி ஸ்ரீமதி பார்வதி அம்மாள்.

பயந்தபடியே எழுந்து நின்றாள் லக்ஷ்மி.

" இல்லை மாமி! துணியெல்லாம் துவைத்துவிட்டு அண்டாவில் தண்ணீர் கொட்டிவிட்டு இப்பத்தான் தவலை தேய்க்க வந்தேன்" என்றாள்.

" சரி, சரி! சீக்கிரமாகத் தேய்த்து விட்டு, தோசைக்கு நனைத்து வைத்திருக்கிறேன் அதை அரைத்து விட்டுச் சாப்பாடு. நான் காமாட்சி வீட்டுக்குப் போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டு நடையைக் கட்டினாள் பார்வதி அம்மாள்.

" சரி, மாமி!" என்றாள் லக்ஷ்மி.

* * *

விசுவநாதன் ரயில்வே ஆபீஸில் நூறு ரூபாய் சம்பாதிக்கும் சாதாரண குமாஸ்தா. அவருக்கு வரும் சம்பளத்தைத் தவிர வேறு சொத்து ஒன்றும் கிடையாது. அவருடைய அப்பாவோ தாத்தாவோ அவருக்குக் காலணாக் காசுகூடச் சேர்த்து வைக்கவில்லை. அவரது ஒரே சகோதரியான காமுவும் விவாகமாகி வடக்கே எங்கேயோ தன் கணவனுடன் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தாள். அதனால் அவருக்கு வேறு எவ்வித தொல்லையும் கிடையாது. பிரும்மச்சாரியான அவர் நிம்மதியாகக் காலம் கழித்து வந்தார்.

பூங்குடி கிராமத்திலே சாதாரண குடும்பத்திலே பிறந்து வளர்ந்தவர் நடேசன். அவரது ஒரே தங்கை விசாலத்தின் கல்யாணத்தை முடித்து வைக்கும் பொறுப்பை அவர் தலையில் சுமத்திவிட்டு அவர் பெற்றோர்கள் கண்ணை மூடி விட்டார்கள்.

கல்யாண வயசை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்த தங்கைக்காகப் பல இடங்களிலும் வரன் தேடி அலைந்து அலுத்துப் போன நடேசன் கடைசியாக விசுவநாதனை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்தார். சொத்து என்று ஒன்றுமில்லாவிட்டாலும் சிறு பையனாகவும், சர்க்கார் வேலையில் இருப்பவனாகவும் இருக்கிறானே என்று எண்ணி விசாலத்தை அவனுக்குக் கொடுத்தார்.

விசாலம் இயற்கையிலேயே ரொம்ப அடக்கமானவள்; தன் கணவன் ஏழையாக இருக்கிறாரே என்று அலட்சியம் செய்து ஒரு நாளாவது அவரிடம் மனம் கோணியதில்லை. உலகத்தாரைப் போல் தானும் நகை நட்டுடனும், பட்டுப் புடவையுடனும் வாழவில்லையே என்று அவள் ஏங்கியதில்லை. விசாலம் குடித்தனப் பாங்கறிந்தவள். கணவனின் நிலைமை தெரிந்து பாங்குடனும் இங்கிதமாகவும் செட்டாகவும் குடித்தனம் நடத்தினாள். அவர்கள் வாழ்க்கை அமைதியுடன் இன்பகரமாகவே ஓடிக் கொண்டிருந்தது.

நான்கு ஆண்டுகளுக்குப் பின் லக்ஷ்மி அவர்கள் செல்வப் புதல்வியாய்ப் பிறந்தாள். அதற்குப் பிறகு விசுவநாதனுக்குப் படிப்படியாக வேலை உயர்வு ஏற்பட்டது. கையிலும் பணம் சேர ஆரம்பித்தது. எல்லாம் குழந்தையின் அதிர்ஷ்டம்தான் என்று மகிழ்ந்தனர் விசுவமும் விசாலமும்.

ஆனால் அவர்களுடைய இன்ப வாழ்வு தெய்வத்துக்கே பொறுக்கவில்லை. ஒரு நாள் ஆபீஸிலிருந்து வந்து மார்பை வலிக்கிறது என்று சொல்லிக் கீழே படுத்த விசுவநாதன் பிறகு எழுந்திருக்கவே யில்லை. விசாலம் கதறித் துடித்தாள்; மஞ்சளையும் குங்குமத்தையும் இழந்து நின்றாள். விஷயமறிந்த விசுவநாதனுடைய தங்கை காமு தன் கணவனுடனும் குழந்தை சந்துருவுடனும் அண்ணாவின் காரியத்திற்காக டில்லியிலிருந்து வந்தாள். விசாலத்தின் அண்ணா நடேசனும் விசுவநாதனின் கடைசிக் காரியங்களை முடித்துக் கொண்டு தங்கையைக் கையோடு அழைத்துப் போக வந்திருந்தார்.

" மன்னி! நீ என்னுடன் டில்லிக்கே வந்து விடேன். குழந்தை லக்ஷ்மியும் சந்துருவும் இந்தப் பத்து நாட்களில் எவ்வளவு ஒட்டிக் கொண்டு விட்டார்கள், பார். அவர்களுக்கும் ஒன்றுக்கொன்று துணையாக இருக்கும். உனக்கும் அண்ணாவுடைய பிரிவின் துக்கம் சற்று மாறி ஆறுதலாயிருக்கும்" என்று அன்புடனும் ஆசையுடனும் வற்புறுத்தி அழைத்தாள் காமு.

"இல்லை காமு!.....அண்ணா என்னைத் தன்னுடன் அழைத்துப் போக வந்திருக்கிறார். மேலும் உன்னுடன் வந்து இருப்பது உலகத்தாரின் கண்களுக்குத் தவறானதாகப்படும்; வம்பு வளரும்; நாம் ஏன் வீண் பழிக்கு ஆளாக வேண்டும், காமு! நான் அண்ணாவுடனேயே போகிறேன்'' என்றாள் விசாலம் தழதழத்த குரலில்.

காமுவால் பதில் பேச முடியவில்லை.

* * *

தான் ஐந்து வயதுக் குழந்தை லக்ஷ்மியுடன் அண்ணா வீட்டில் காலடி எடுத்து வைத்து நுழைந்தபோதே தனக்கு மன்னியினால் எத்தகைய வரவேற்புக் கிடைக்கும் என்பதை விசாலம் நன்கு அறிந்திருந்தாள். அவளுக்கு மன்னி பார்வதியின் சுபாவம் நன்றாகத் தெரியும். தனக்கு அந்த வீட்டிலே எத்தனைக் கஷ்ட நிஷ்டூரங்கள் ஏற்பட்டபோதிலும் பொறுமையுடன் சகித்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தாள். குழந்தை லக்ஷ்மிக்காக அண்ணாவைவிட்டு வேறெங்கும் போகக்கூடாது என்று உறுதி கொண்டாள்.

வந்த புதிதில் மிகவும் அன்பாகவே விசாலத்தை நடத்தினாள் பார்வதி. விசாலம் கொண்டு வந்திருந்த ஆயிரம் ரூபாய் அவளை அவ்வாறு நடக்கும்படி செய்தது. ஆனால் பணம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து பார்வதியின் காதிலும், மூக்கிலும் கழுத்திலும் நகையாக மாறிவிட்ட பிறகு நிலைமை மோசமாகத் தொடங்கியது. பார்வதி மெதுவாகத் தன் சுபாவத்தைக் காட்டத் தொடங்கினாள். அன்று முதல் விசாலம் அந்த வீட்டுச் சமையற்காரியாக நடத்தப்பட்டாள். பார்வதி தன் கொடுமையைச் செயலிலும் சொல்லிலும் காட்டத் தொடங்கினாள்.

"தொடைகாலி! என் வீட்டுக்கு எந்த வேளையில் காலடி எடுத்து வைத்தாயோ என் வீட்டையும் துடைத்துக் கொண்டு போறே! உங்களுக்கெல்லாம் தண்டச் சோறு போட்டு என் மஞ்சள் காணி நிலமெல்லாம் வீணாகிறது. உங்க அப்பன் வீட்டுச் சொத்தா பாழ் போகிறது! சனியன்கள் வீட்டை விட்டு ஒழிந்தால்தான் இந்த வீடு விடியும்'' என்று பார்வதி ஆங்காரத்துடன் கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்தபடி உச்சஸ்தாயியில் இரைந்து கொண்டிருந்தாள்.

சமையல் அறையில் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்த விசாலத்தின் காதுகளில் இச் சொற்கள் ஈயத்தைக் காய்ச்சி விட்டதுபோல் விழுந்தன. அவள் மனம் வேதனையினால் துடித்தது; பார்வதியின் ஒவ்வொரு சொல்லும் அவள் உள்ளத்தில் அம்பாகத் தைத்தது. தன் கணவனுடன் ஆனந்தமாக வாழ்ந்த வாழ்வையும், தற்சமயம் அனுபவிக்கும் சிறுமையையும் எண்ணி அவள் மனம் குமுறிற்று. விதி தனக்குச் செய்த கொடுமையை எண்ணி நொந்து கொண்டாள்.

பார்வதியின் கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் நடேசன்.

"ஏன் பார்வதி! இப்படிக் கத்தறே! கொஞ்சம் மெதுவாகப் பேசக்கூடாதா! என்ன நடந்து விட்டது! அனாவசியமாய் ஏதுக்கு இப்படி கண்டபடி விசாலத்தைத் திட்டுகிறாய்! அவளே மனசு நொந்து போய் வந்திருக்கா .....'' அதற்கு மேலே நடேசன் வார்த்தையை முடிக்கவில்லை.

"ஆமாம். உங்களுக்கு உங்கள் தங்கைதான் ஒசத்தியாகப் போய் விட்டாள். அவளையே வைத்துக்கொண்டு குடித்தனம் நடத்துங்கள். நானும் என் குழந்தைகளும் எப்படியாவது போகிறோம். என்னால் இனிமேல் ஒரு நிமிஷம் கூட இந்த வீட்டிலே இருக்க முடியாது நான் போகிறேன்'' என்று அழுது அடம் பிடித்தாள் பார்வதி.

'உன்னை இப்போ யாரு என்ன சொல்லி விட்டார்கள்! ஏதுக்கு இப்படி வீட்டிலே ரகளை பண்ணுகிறாய்! இனிமேல் இதுமாதிரி ஏதாவது நடந்தால் நான் எங்கேயாவதுபோய்விடுவேன்.''

சமையல் அறையிலிருந்து பரபரவென்று வேகமாக வெளியே வந்தாள் விசாலம்.

"அண்ணா! அதுமாதிரி யெல்லாம் ஒன்றும் செய்து விடாதீர்கள். எனக்காக மன்னியுடன் சண்டை போடவேண்டாம். என்னால் எல்லாருக்கும் கஷ்டம்தான். என் காலக் கொடுமை நான் வார்த்தை கேட்டுக் கொள்கிறேன்'' என்றாள் வருத்தம் தோய்ந்த குரலில்.

சீறி எழுந்தாள் பார்வதி. "நான் இப்போது உன்னை என்ன சொல்லிவிட்டேன்! என் மேலேயே குற்றத்தைச் சுமத்துகிறாயே. பகவான் உன்னை இந்தமாதிரி அவலமாய் வைத்திருக்கும்போதே உனக்கு இத்தனை வாய் இருக்கிறதே! இன்னும் உலகத்தாரைப் போல இருந்தால்......''

விசாலத்தால் இந்த வார்த்தைகளைத் தாங்க முடியவில்லை. அவள் கண்களில் கண்ணீர் பளபளத்தது. புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்தபடி சமையற்கட்டுக்குச் சென்றாள்





இதுமாதிரி இன்னும் எத்தனையோ சம்ப வங்கள் தினந்தோறும் நிகழ்ந்தன. நாளுக்கு நாள் பார்வதியின் கொடுமை அதிகரித்தது. விசாலம் தன் ஒரே குழந்தையான லக்ஷ்மியின் எதிர்கால வாழ்வை உத்தேசித்து எல்லா கஷ்டங் களையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டாள்.

*   *   *

வருஷங்கள் ஓடி மறைந்தன. லக்ஷ்மி இப் போது இரண்டுங் கெட்டான் குழந்தையில்லை. விவரமறிந்த பக்குவமடைந்த பெண். காலம் மாறிற்றே ஒழிய அவர்கள் நிலைமை மாறவில்லை. விசாலத்துடன் லக்ஷ்மியும் சேர்ந்து இப்போது கஷ்டம் அனுபவித்தாள். விசாலத்தின் உடல் தேய்ந்ததைப் போல் அவள் உள்ளமும் தேய ஆரம்பித்தது. லக்ஷ்மியைக் கண்கலங்காமல் எங் கேயாவது ஒரு நல்ல இடத்தில் கொடுத்து விட வேண்டும் என்ற ஒரு எண்ணமே அவளுடைய மனசை வாட்டிக் கொண்டிருந்தது. அதற்காகவே அவள் உயிரை வைத்துக் கொண்டிருந்தாள்.

நடேசனுக்கோ தன் தங்கை பெண் லக்ஷ்மியின் மீது அபார வாஞ்சை. லக்ஷ்மியை ஒரு நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டுத் தம் கடமையைச் செய்யவேண்டும். அப்போது தான் நொந்து கிடக்கும் விசாலத்தின் மனம் திருப்தி அடையும் என்று எண்ணினார்.

நடேசன் லக்ஷ்மிக்காக வரன் தேடித் தேடி அலுத்துப் போனார். வந்த வரன்களெல்லாம் வரதட்சிணை, சீர் விஷயமாகப் போய்விட்டது. நடேசன் வகை அறியாமல் திண்டாடினார்.

*   *   *

அன்று மத்தியானம் ஒரு மணி இருக்கும். எங்கேயோ வரனுக்காக அலைந்துவிட்டு உள்ளே நுழைந்தார் நடேசன். அவர் முகத்திலே போன காரியம் ஜெயமாகவில்லை என்ற ஏமாற்றத்தின் அறிகுறி பிரதிபலித்தது. கைக் காரியத்தைப் போட்டு விட்டு மாமாவுக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள் லக்ஷ்மி. அதே சமயம் வாயிற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள் பார்வதி. அவள் முகத்தில் ஏதோ பெரிய காரி யத்தைச் சாதித்துக் கொண்டு வந்து விட்ட பெருமை ஜொலித்தது.

"இப்பொழுதுதான் வந்தீர்களா ! வெய்யிலிலே அலைந்து அலைந்துதான் உடம்பு இப்படி ஓடாய்ப் போகிறது. இதோ பாருங்கோ ! நமக்கு இருக்கும் அந்தஸ்துக்கு உயர்ந்த இடமா பார்த்தா முடியுமா! இரண்டாந்தாரமாக எங்கேயாவது பார்த்துக் கொடுக்க வேண்டியதுதான். காமாட்சி வீட்டுக் குப் போய்விட்டு இப்பத்தான் வருகிறேன். அவள் வீட்டுக்காரருக்கு ஒன்று விட்ட மைத்துனராம். அவருடைய முதல் மனைவிபோய் இரண்டு வரு ஷம்தான் ஆகிறதாம். நாற்பது வயது ஆகிறது. பார்த்தால் முப்பது வயதுதான் மதிக்கலாம். அவருக்கு ஒரே ஒரு பிள்ளை. பம்பாயில் வேலையா இருக்கானாம். ஏராளமான சொத்து வீடு வாசல் எல்லாம் இருக்கு. நான் லக்ஷ்மியின் ஜாதகத்தைக் கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன்" என்று மூச்சு விடாமல் சொல்லி நிறுத்தினாள்.

நடேசன் பதில் பேசாமல் மௌனத்தில் ஆழ்ந் திருந்தார். இரண்டு நாட்கள் சென்றன. தன் நிலைமையை உத்தேசித்து நடேசன் இந்த வரனைப் பற்றி லக்ஷ்மியிடம் பிரஸ்தாபித்தான்.

லக்ஷ்மி நல்ல விவேகி. அந்த வீட்டிலே தன் அம்மாவும் தானும் இருக்கும் நிலைமையை நன்கு அறிந்திருந்தாள். ஒரு நாளாவது அவள் தன் எதிர்கால இன்ப வாழ்வைப் பற்றிச் சிந்தனை செய் ததே இல்லை. எப்படியாவது அம்மாவுடன் அந்த வீட்டிலிருந்து வெளியேறி, வாழ்விலே என்னத் தையே சுகத்தையும் காணாத அம்மாவைத் தன்னு டன் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று உறுதி கொண்டிருந்தாள். தன் மண வாழ் வைப் பற்றி அவள் கவலை கொள்ளவில்லை.

"மாமா, எனக்கு நல் வாழ்வை வகுத்துக் கொடுக்க உங்களுக்குத் தெரியாதா ! இந்த வரனை நீங்கள் முடிப்பது பற்றி எனக்கு வருத்தமில்லை. பரிபூரண சம்மதந்தான்" என்றாள். விஷயமறிந்த விசாலம் ஒன்றும் பதில் பேசவில்லை. லக்ஷ்மியே இந்த நாற்பது வயதுக்கார வரனுக்கு ஒப்புக் கொண்டு சம்மதம் கொடுத்த பிறகு அவளுக்குப் பேச வாய் எங்கிருக்கிறது !

*   *   *

கூடத்தில் விரிக்கப்பட்டிருந்த ஜமக்காளத் தில் நடேசனும் வந்திருந்த மனிதரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மாப்பிள்ளை என்று வந்திருந்த அந்த மனிதருக்கு நாற்பது வயதுக்கு மேலேயே இருக்கும். சாந்தம் தவழும் முகம். நரைத்த தலை, சுருக்கம் விழுந்த நெற்றி, முதுகிலே ஒரு வளைவு, வாழ்வை நன்றாக அனுபவித்துச்

சலிக்க வாழ்ந்து விட்டதனால் உடலிலே ஏற்பட்ட ஒரு தளர்வு. இத்தியாதி லக்ஷணங்கள்.

பார்வதி காமாட்சியுடன் சமையற் பக்கத்துத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். லக்ஷ்மி சுவரோடு சுவராய்ச் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள். கூடத்திலிருந்தபடியே "லக்ஷ்மி! இங்கே வந்து நமஸ்காரம் பண்ணு" என்று அன்புடன் அழைத்தார் நடேசன்.

குனிந்த தலை நிமிராமல் இயந்திரம் போல் வந்து லக்ஷ்மி அவர்களை நமஸ்காரம் செய்து விட்டு உள்ளே போனாள். விசாலத்துக்குத் தனக்கு மாப்பிள்ளையாக வரப்போகும் மனிதரைப் பார்க்க வேண்டுமென்று உள்ளூற ஆசை. ஆனால் நாற்பது வயதுக்காரரைப் போய் என்ன பார்வை என்று பேசாமல் இருந்தாள். இருந்தாலும் அவள் மனசு கேட்கவில்லை. மெதுவாக, சமையல் அறையிலிருந்து வெளியே வந்து எட்டிப் பார்த்தாள்.

சமையல் அறையை நேராகப் பார்த்தபடி எதிரே கூடத்தில் அமர்ந்திருந்த மனிதரை நேருக்கு நேராக ஒரு முறை உற்றுப் பார்த்த விசாலத்துக்குப் பூமியே ஒரு முறை தட்டா மாலையாகச் சுற்றுவது போல் இருந்தது. மறுகணம் "ஹா! காமுவின் அகத்துக்காரரா!" என்று அலறியபடியே கதவிலே சாய்ந்து கொண்டாள்.

எல்லோரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். "என்ன அம்மா, உன் உடம்புக்கு!" என்று பதறியபடியே விசாலாட்சியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள் லக்ஷ்மி. எல்லோரும் விசாலத்தைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"லக்ஷ்மி, இவர்தான் உன் காமு அத்தையின் புருஷர். டில்லியிலே இருக்கிறார் என்று சொல்லுவேனே, இவர்தான்! நீ அப்பொழுது குழந்தை. உனக்கு இவரை ஞாபகம் இருக்காது..." இதற்கு மேல் விசாலத்தால் பேச முடியவில்லை. அப்படியே சோர்ந்து போய் விழுந்து விட்டாள்

மாப்பிள்ளையாக வந்திருந்த நடராஜன் இதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனார்.

"விசாலம், நீயா! குழந்தை லக்ஷ்மியா இவள்! எத்தனை மகத்தான பாதகத்தைச் செய்ய இருந்தேன்! விசாலம் என்னை மன்னித்துவிடு. காமு தவறிப்போய் இரண்டு வருஷமாகிறது. சந்துரு பம்பாயில் வேலையாயிருக்கிறான். என் கண்களை நீதான் திறந்துவிட்டாய். நான் செய்ய இருந்த குற்றத்திற்குப் பிராயச்சித்தமாக லக்ஷ்மியைச் சந்துருவுக்கே விவாகம் செய்து வைத்து விடுகிறேன். லக்ஷ்மி! நீ என் மருமகள்!" என்றார்.

விசாலத்தின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. நடேசனின் உள்ளத்திலிருந்து நிம்மதியான ஒரு பெருமூச்சு வெளிவந்தது.

பார்வதி திறந்த வாய் மூடாமல் ஆச்சரியத்துடன் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு மலைத்துப் போய் நின்று கொண்டிருந்தாள்.

* * *

அடுத்த முகூர்த்தத்திலே சிரஞ்சீவி சந்துருவுக்கும் சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தேறியது.

அன்று இரவு புறப்பட்ட பம்பாய் மெயில் சந்துரு, லக்ஷ்மி, விசாலம், லக்ஷ்மியின் மாமனாரான நடராஜன் ஆகியவர்களைச் சுமந்து சென்றது. அவர்கள் வாழ்வு மலர்வது போல விடிவெள்ளி அவர்களுக்கு முன்னே தோன்றி மேலெழும்பிக் கொண்டிருந்தது. நடராஜன் தன் மருமகள் லக்ஷ்மியைப் பார்த்துப் புன்னகை பூத்தார். லக்ஷ்மி தன் கணவரைப் பார்த்துப் புன்னகை பூத்தாள் இவர்களை எல்லாம் பார்த்துப் புன்னகை பூப்பது போல வானவீதியில் சூரியன் உதயமானான்.




Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

**Regd. No. M 4392**

*Registered as a newspaper in Ceylon*